

அறிமுகப்படுத்துகிறோம்!

# புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர்

## அது வேர்க்குருவிற்கு விரைவாக நிவாரணமளிப்பது மட்டுமல்ல, உண்மையிலேயே அதைத் தடுத்திட உதவுகிறது.

**நீங்கள் வேர்க்குருவைத் தடுக்க முடியும்போது அது தாக்கும்வரை ஏன் காத்திருக்க வேண்டும்?**

இப்போது, உங்கள் வேர்க்குரு பிரச்சினையைக் கட்டுப்படுத்த இன்னும் மிகத் தீவிரமான வழி—புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர். அது வேர்க்குருவிற்கு விரைவாக நிவாரண மளிப்பது மட்டுமல்ல உண்மையிலேயே அதை தடுத்திட உதவுகிறது.

**புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர் ஏன் மிகவும் தீவிரமானது?**

உங்களுக்கு அதிகமாக வியர்த்து, அந்த வியர்வை உங்கள் சருமத்தில் அதிக நேரம் தங்கியிருக்கும்போது, வேர்க்குருவின் தாக்குதலுக்கு நீங்கள் ஆளாகிறீர்கள். அதற்காகத்தான் புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர் மிகவும் தீவிரமானதாகத் தயாரிக்கப்பட்டுள்ளது. வியர்வையை நன்றாகவும் விரைவாகவும் உறிஞ்சும் வண்ணம் விசேஷமாகத் தயாரிக்கப்பட்டுள்ளது அது— உங்கள் சருமத்தில் பாக்டீரியாக்கள் பெருகுவதைத் தடுக்கிறது— ஆகவே வேர்க்குரு இல்லை, எரிச்சல் இல்லை, நமைச்சல் இல்லை. அப்பாடா என்ன நிவாரணம்! அதற்குமேல் புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர், இப்போது மகிழ்ச்சிதரும் புதிய நறுமணமும்* கொண்டுள்ளது.

வரும் கோடையில் வேர்க்குரு தாக்கும் வரை காத்திருக்காதீர்கள். விரைந்து வாங்கிடுங்கள் ஒரு பேக் புதிய ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர். வேர்க்குருவை நீங்கள் தடுக்க முடியும்போது, வேர்க்குருவால் ஏன் சிரமப்பட வேண்டும்?










*சந்தன மணத்திலும் கிடைக்கிறது.

Johnson & Johnson

OBM-4181 TAM

# நாளை வரப் போகும் நகரம்

இருபத்து ஒன்றாம் நூற்றாண்டு எப்படி இருக்கும்? நாளைய உலகின் நகரங்கள் எப்படி இருக்கும்? த்சுகுபாவில் நுழைந்தால் தெரிந்துக் கொள்ளலாம்.

த்சுகுபா! உலகின் கவனத்தை ஈர்க்கும் விஞ்ஞான நகரம். ஜப்பானியத் தலைநகர் டோக்கியோவிலிருந்து அறுபது கிலோ மீட்டர் தூரத்தில் அமைந்துள்ள ஒரு விந்தை உலகம்.

த்சுகுபா—மலையடிவாரத்தில் உருவாக்கப்பட்ட இந்தப்புதியநகரத்தில்தான் எக்ஸ்போ 85 எனும் விஞ்ஞான, தொழில் நுட்பக் கண்காட்சி இப்பொழுது நடைபெறுகிறது.

ஓசாகாவிலும் ஆக்கினா வாவிலும் இதற்கு முன் உலகக் கண் காட்சிகளை ஜப்பான் நடத்தியிருக்கிறது. ஆனால் த்சுகுபா கண்காட்சி உலகின் அதி நவீனமான கண்காட்சி. இரண்டு கோடி மக்களை ஈர்க்கப் போகும் இதில் அப்படி என்ன புதுமை?

உலகின் மிகப் பெரிய டீ.வி. செட் ஜம்போட்ரான் பிரமிக்க வைக்கிறது. இருபது மீட்டர் உயரம், நாற்பது மீட்டர் அகலம். திரையில் படத்தைப் பார்க்க வேண்டுமா? நாற்பது மீட்டர் தள்ளி நின்று பார்த்தால் தான் ரசிக்க முடியும். சோனி நிறுவனம் இதை அமைத்திருக்கிறது.

ஜப்பானின் என். சி. இ. நிறுவனம் அமைத்துள்ள அரங்கில்இன்னொருபுதுமை, 330 சென்டி மீட்டர் வீடியோ திரைகள் 27 இடம் பெற்றிருக்கின்றன. அகலமான திரையில் அதிசயமான விஞ்ஞான, தொழில் நுட்பக் காட்சிகள். எல்லாமே கம்ப்யூட்டர் மயம். விண்வெளிப் பயணஅனுபவத்தை இங்கு பெறலாம்.

காற்றில் மிதக்கும் அனுபவம் எப்படி இருக்கும்? இந்தக் கண்காட்சி அரங்கில் ஜப்பான் ஏர்லைன்ஸ் எச். எஸ். எஸ். டி. எனும் பறக்கும் சாதனத்தை இதற்கென உருவாக்கி இருக்கிறது. காந்த சக்தியில் மணிக்கு முந்நூறு கிலோ மீட்டருக்கும் அதிகமான வேகத்தில் பறந்தோடும் வாகனம் இது. தண்டவாளத்திற்கு மேல். ஆனால் தண்டவாளத்தில் பதியாமல்! ஜப்பானிய அரசாங்கம் அமைத்துள்ள அரங்கில் நுழைந்தால் இன்னும் பல அதிசயங்கள்..., பச்சைப்பசிய காய்கறிப் பண்ணை இருக்கிறது. ஆனால் கறிகாய்கள் வளர்வது மண்ணில் அல்ல. வினாடிக்கு ஒரு சென்டி மீட்டர் வீதம் நகரும்

த்சுகுபா எக்ஸ்போ '85ன் எம்ப்ளம்



த்சுகுபாவில் ஒரு வரலாற்று மாடல்



கன்வேயர் பெல்டில் விவசாயம் நடக்கிறது. தினமும் 112 லெட்டூஸ் விளைச்சல்! கம்பியூட்டர் முறை விவசாயம் என்பதால் லெட்டூஸ் ஐந்து அல்லது ஆறு மடங்கு பெரிதாகக் கிடைக்கிறது.

அடுத்தது மோட்டார் வாகன அரங்கு. மொத்த கண்காட்சியையும் உயரமான இடத்திலிருந்து கண்டு மகிழலாம். கீழே இறங்கினாலோ கண்காணு அதிசயக் காட்சிகள்... பனிமலை அடிவாரம், பாலைவனக் காட்சி, பசுமையான புல்வெளி... ஆட்டு மந்தைகள் என்று அலங்கார ஜோடனைகள். எல்லாமே அசல் அல்ல, நகல்...

எதிர்காலக் கார்கள் எப்படி இருக்கும் என்பதையும் இந்த அரங்கில் காணலாம்.

ரோபாட் யுகம் வருகிறது அல்லவா? இந்தக் கண்காட்சியில் 'ரோபாட்' இயந்திர மனிதர்களுக்கும் குறைவில்லை. பியானோ இசைக்கும் இயந்திர மனிதனைச் சந்திக்கலாம். இந்த ரோ- பாட்டை உருவாக்கியவர் ஜப்பானியப் பல்கலைகழகப் பேராசிரியர் ஒருவர்.

கம்ப்யூட்டர், உலகை எப்படியெல்லாம் ஆட்டிப் படைக்கப் போகிறது என்பதை கண்டுவியப்படையும்அதேநேரத்தில்இந்தக் கண்காட்சி கடந்த காலத்தையும் நினைவில் நிறுத்துகிறது. கலை, கலாசார பாரம்பரியங்களைப் பளிச்சிடும் அரங்குகளும் அமைந்திருக்கின்றன. ஜப்பானிய நூல் வெளியீட்டு நிறுவனம்ஒன்றுயுனெஸ்கோவுடன்சேர்ந்து அமைந்துள்ள அரங்கு உலகின் பழம் பெரும் சின்னங்களின் காட்சிக் கூடமாகத் திகழ்கிறது. ஐக்கிய நாட்டு நிறுவனத்தின் அமைதிப் பணி அரங்கையும் பார்க்கலாம். த்சுகூபா விஞ்ஞான நகரக் கண்காட்சியில் ஜப்பானுடன் சுமார் நாற்பது வெளி நாடுகளும் கலந்து கொள்கின்றன. அமெரிக்கா, சோவியத் யூனியன், சீனு, பிரிட்டன், பிரான்ஸ், ஜெர்மனி ஆகியவற்றின் அரங்குகளிலும் விஞ்ஞானப் புதுமைகளைப் பார்க்கலாம். அமெரிக்க அரங்குக்கு அரசாங்கச் செலவு சுமார் நூறு கோடி ரூபாய். அமெரிக்கத் தனியார் நிறுவனங்களின் அரங்க நிர்மாணச் செலவு மேலும் சுமார் 45 கோடி ரூபாய்.



ஒரு ரோபோட் 'சபாஷ்' என்று எழுதுகிறது

சோவியத் அரங்கில் விண்வெளிச் சாதனை, எரிபொருள், வீட்டு வசதி கலை, கைவினைக் காட்சிகள் ஏராளம்.

ஜப்பானிய அரசாங்கம் 101 ஹெக்டேர் நிலத்தில் அறுபது கோடி டாலர் செலவில் உருவாக்கியுள்ள த்சுகூபா விஞ்ஞானக் கண்காட்சி நகரம் செப்டம்பர் மாதம் வரை திறந்திருக்கும். 12 ஆயிரம் விஞ்ஞானிகளும், பொறியாளர்களும் பாடுபட்டு உருவாக்கியுள்ள விந்தை நகரம் இது.

கண்காட்சி ஒருபுறம் நடக்க, ஜப்பானிய விஞ்ஞானிகள் இதுவரை சுமார் 24 ஆயிரம் ஆராய்ச்சி அறிக்கைகளை வழங்கியிருக்கிறார்கள், எதிர் கால விஞ்ஞான, தொழில் நுட்ப யுகம் பற்றி.

தசுகுபாவில் இன்னும் எவ்வளவோ நடக்கப் போகிறது!

— ஜே. எம். எஸ்.




ஹிட்டாச்சி நிறுவனத்தின் [illegible] அரங்கம்

புதியது

## பால் அடங்கிய
# ஃபாரெக்ஸ்
## திட உணவு

# அதிக சுவையானது
# அதிக முழுமையானது

ஏற்கெனவே பால்
அடங்கியது




**நீங்கள் பாசத்துடன்
ஊட்டும் ஒவ்வொரு கவளமும்
உங்கள் பாப்பாவின்
வளர்ச்சிக்குச் சிறந்ததாகும்.**

பால் அடங்கிய ஃபாரெக்ஸ் திட உணவு. இதைக் கலப்பது எளிது. பாப்பாவுக்கு ஊட்டுவதும் எளிது.

பாப்பாவின் வளர்ச்சிக்கு இன்றியமையாத புரதம் நிரம்பியது. மிக ஆரோக்கியமான இரத்தத்திற்குக் கூடுதல் இரும்புச்சத்து கொண்டது. உறுதியான பற்களையும் எலும்புகளையும் பெற சரியான விகிதத்தில் கால்ஷியமும் ஃபாஸ்ஃபரஸும் அடங்கியது. பாப்பாவின் மென்மையான ஜீரண சக்திக்கென முன்கூட்டிப் பக்குவம் செய்தது.

பால் அடங்கிய ஃபாரெக்ஸ் திட உணவு. அதிக முழுமையான திட உணவு.

உடல் நலத்தின் உறைவிடம்—**க்ளாக்ஸோ**

---

**இலவசம்!** குழந்தையின் முதலாண்டுப் புத்தகம்: உங்களது பிரதியைப்பெற தபால் மற்றும் இதர செலவிற்கு ரூ. 1/— தபால்தலை உள் வைத்து எழுதுவீர் இம்முகவரிக்கு—தபால் பெட்டி எண் 19119, (FCM-21) பம்பாய் 400 025.

CLARION/B/GX/4/203 TAM

# உலகிலேயே நீளமான சினிமா

* எதையாவது சாதி. ஏதாவது புதுமையாகச் செய்து காட்டு! இந்த உத்வேகம் உந்திவிட மனிதர்கள் என்னவெல்லாம் செய்யத் துணிகிறார்கள்!

* கின்னஸ்ரிகார்ட்லேடஸ்ட்பதிப்புவெளிவந்துவிட்டது. மாதிரிக்குச் சில:

எத்தனை டிகிரி ஜுரம் வரை உடம்பு தாங்கும்?

கின்னஸ் ரிகார்ட் 115.7°F என்கிறது. 1980 ஜூலை 10–ந்தேதி ஜியார்ஜியாவில் உள்ள வில்லி ஜோன்ஸ் தமது 52–வது வயதில் இவ்வளவு ஜுரத்தைத் தாங்கி உயிர் பிழைத்திருக்கிறார்.

தும்மலில் எது உலக சாதனை?

1981 ஜனவரி 13 முதல் செப் 16 வரை டோனா கிரிபித் தும்மியது. 194 நாட்கள் தும்மியிருக்கிறார்.



• தலையில் வைத்த பால் நிரம்பிய பாட்டிலைப் பிடித்துக் கொள்ளாமல், அது கீழே விழாமல் சமாளித்தவாறு 24 மைல் [illegible] நடந்தார் அமெரிக்க அஷ்ரிதா ஃபர்மன்.



நடிகை ஜேன் வய்மன். இன்றைய அமெரிக்க ஜனாதிபதியின் முன்னாள் மனைவி. 'இப்போது நீ ராணுவத்தில் இருக்கிறாய்' என்ற படத்தில் இவரும் ஹீரோ ரெஜிஸ் டூமியும் 185 வினாடி நேரம் நீண்ட ஒரு முத்தக் காட்சியில் நடித்தனர். இந்த ரிகார்ட் இன்னும் முறியடிக்கப்படவில்லை.




உலகிலேயே மூத்தவராகக் கருதப்படும் ஷிகி சியூ இஜுமிக்கு வயது 119. திறந்தவெளியில் எளிய வாழ்க்கை வாழ்ந்ததே தமது ஆயுளின் ரகசியம் என்று கூறும் இந்த ஜப்பானியர் தம்மைக் காண வந்த குழந்தைக் குலத்துடன் படத்தில் காட்சி தருகிறார்.

குறட்டையில்?

மெல்வின் ஸ்விட்ஸர். 1984 ஜூன் 28—ல் 87.5 டெஸிபல் சத்தம். நல்லவேளை மனைவி ஜூலிக்கு ஒரு காது செவிடு.

நீங்கள் ஒரே இடத்தில் எவ்வளவு நேரம் நிற்பீர்கள்?

வில்லியம் ஏஸ்புருவா, 10 மணி 58 நிமிஷம். 4000 பேர் கூடிய கலிபோர்னியா காலரியில் இவர் நின்றிருக்கிறார். (ஸாரி, பத்து நிமிஷம் பல்லவனில் நின்று ஸீட் கிடைத்தால் நாம் புலிப் பாய்ச்சல் பாய்கிறோம்.)

பிரெயின் லாடஸா என்ன, 'ஷாக்' வாங்கியா?

என்னமோ தெரியாது. லாஸ் ஏஞ்சல்ஸ் கிரிஃபித் பூங்காவில் அந்த 17 வயது பிரெயின் லாடஸா 23,000 வோல்ட் மின்சார ஷாக்கை வாங்கி கின்னஸில் இடம் பெற்றிருப்பது நிஜம்.

வந்த தபாலில் என்ன ரிகார்ட்?

ஒரே ஆண்டில் ஒரு மனிதனுக்கு எத்தனை தபால் வரலாம்? பேஸ் பால் நட்சத்திரம் அரோனுக்கு 1974—இல் 9 லட்சம் தபால்.

உலகிலேயே நீளமான சினிமா எது?

1970—இல் வெளிவந்த 'தி லாங்கஸ்ட் மோஸ்ட் மீனிங்லெஸ் மூவி இன் தி வோர்ல்டு. 48'மணி நேரம் ஓடிய படத்தைத் தாங்க முடியாமல் 90 நிமிடம் ஓடும்படியாய்க் 'கட்' பண்ணிவிட்டார்கள்.

வீரத்தாய் யார்?



உலகிலேயே மிகப் பெரிய பரங்கிக்காய் — 402 பவுண்டு. விளைவித்தவர் பிரிட்டிஷ்காரர் ஆர். மார்ஷல்.




கின்னஸ் புத்தகத்தின் முகப்பு

மாஸ்கோவிலிருந்து 150 மைல் தூரத்திலுள்ள ஷூயா பெற்றெடுத்த குழந்தைகள் 69. இரட்டைகள் 16, ட்ரிப்லெட் மூன்று, நாலு நாலாய் 4.

சூசன் மான்ட்கோமரியின் சாதனை என்ன?
மிகப் பெரிய பப்பிள் கம் ஊதியது ஊதிய பப்பிளின் விட்டம், 49 செ.மீ.

முட்டையில் என்ன சாதனை?
இரண்டு முட்டைச் சாதனைகள். டேவிட் டோனேக், டோக்கியோ கால்ஃப் பந்தய மைதானத்தில், ஹெலிகாப்டரில் 198 மீ மேலே போய், முட்டையைக் கீழே போட்டார். ரிஸ்டோ ஆன்டிகைனென் என்கிற பின்லாந்துக்காரர் முட்டையைத் தூக்கி எறிய 97 மீ தூரம் போய் விழுந்தது. இரண்டிலுமே கவனிக்க வேண்டிய விஷயம் — முட்டை, மீண்டும் முழுசாய் உடையாது தரையைத் தொட்டது.

ஜோக்கடித்து ரிகார்டு என்ன?
சிரிக்கச் சிரிக்க ஜோக்கடித்தே ரிகார்டு பண்ணியவர் ஃபிலிப் கார்போநெவ். பெரு தேசத்து ஹோட்டல் ஒன்றின் சர்க்கஸ் டென்ட்டில் செப் 9—11 வரை 1983—இல் ஜோக்கடித்தாராம். தொடர்ந்து 40 மணி நேரம்.

முடிவெட்டுவதில் முற்றுப் புள்ளி எப்போது?
கலிஃபோர்னியாவில் நியூயார்க் — நியூயார்க் சலூனில் 1981 மே மாதத்தில் உலக சாதனை நிகழ்ந்தது. நிகழ்த்தியவர் — பிரே

## கின்னஸில் இடம் பெற்ற கின்னஸ்

- முதல் பதிப்பு வெளியானது 1956—இல். இப்போது மொத்தம் 24 மொழிகளில் வெளியாகிறது. 80—இல் இந்திப் பதிப்பு கூட வெளியானது.
- 74—இல் 23.9 மில்லியன் பிரதிகள் விற்று சாதனை புரிந்ததற்காக கின்னஸ் புத்தகத்தின் பெயரே கின்னஸில் இடம் பெற்றது.
- 1984—இல் விற்பனை 49.4 மில்லியன். அடுக்கி வைத்தால், 170 எவரெஸ்ட் சிகரங்களை ஒன்று மேல் ஒன்றாய் வைத்தால் போகிற உயரத்துக்கு நிற்கும்.
- இதன் ஆசிரியரும், தொகுப்பாளரும் நோரிஸ். டி. மாக்விர்டர்.
- சாதனை புரிபவர்கள், அது பற்றின விவரங்களை —நியூஸ் பேப்பர் கட்டிங்குகள், ரேடியோ அல்லது டெலிவிஷன் கவரேஜ் ரிப்போர்ட்டுகளை தகுதியான நிறுவனங்கள், சாட்சிகளின் கையெழுத்துடன் ஆக்ஷன் புகைப்படங்களை (வண்ண ட்ரான்ஸ்பாரன்ஸிகள் பெட்டர்) இணைத்து அனுப்பி வைக்க வேண்டும்.
- நெருப்பில் பாய்வது, உயரத்திலிருந்து 'பாராசூட்' இன்றி குதிப்பது போன்ற 'ரிஸ்க்' ஆன விஷயங்களை கின்னஸ் காரர்கள் ஊக்குவிப்பதில்லை. விபத்துக்களுக்கும் பொறுப்பேற்பதில்லை.
- தமிழ் வருஷப் பிறப்பன்று நாள் முழுக்க தன் நாடகங்களைத் தொடர்ந்து போட்ட எஸ். வி. சேகர் பற்றின விவரம் அடுத்த பதிப்பில் எதிர்பார்க்கப்படுகிறது.

ரோஸும் நோரிஸ் மக் விர்டரும்—கின்னஸின் ஆசிரியர்கள்

NORRIS McWHIRTER OCTOBER

on

Book
Book.
yright
les of
s had
valent
Mount

Ross (*left*) and Norris McWhirter at the time when the *Guinness Book* became a record seller in 1974.



# ஸ்பாட் லைட்





* "கர்நாடக அரசு விளம்பரங்களில் என் போட்டோவை போடக் கூடாது என்று நான் சொல்லியிருக்கிறேன். மற்ற மாநில முதலமைச்சர்கள் அவர்களின் அரசு விளம்பரங்களில் தங்கள் போட்டோக்களைப் போடச் சொல்லுகிறார்கள்!"
('டெபொனேர்' பேட்டியில் கர்நாடக முதலமைச்சர் ஹெக்டே கூறியது.)

* "திருமதி இந்திராகாந்தியின் ஒரே இந்தியப் பேரன் என் மகன்தான்! அப்படியிருந்தும் அவனைப் பிரதம மந்திரியாக்க வேண்டும் என்ற நேரு குடும்பத்து வேதாந்தம் எனக்குக் கிடையாது!"
—மேனகா காந்தி.

* "இந்தியாவில் கட்சி,தலைவரைத் தேர்ந்தெடுப்பதில்லை. தலைவர்தான் கட்சியைத் தேர்ந்தெடுக்கிறார்."
—பத்திரிகைக்காரார் கிரிலால் ஜெயின்.

* முன்பு விமானத்தை பறக்க விட்டுக் கொண்டிருந்த ராஜீவ் காந்தி இப்போது அரசியலில் பட்டம் பறக்க விட்டுக் கொண்டிருக்கிறார்!
—மொரார்ஜி தேசாய்.
('இந்தியன் எக்ஸ்பிரஸ்' நாளிதழிலிருந்து.)

* என்னிடம் தவறாமல் வரி வசூலிக்கிறார்கள். ஆனால் தேர்தல் சமயத்தில் வாக்காளர் பட்டியலில் என் பெயரை விட்டு விடுகிறார்கள்!
('டெக்கான் ஹெரால்ட்' கடிதம்.)
தகவல்: அனிதா ராமச்சந்திரன்.



ஓர் டிஸ். இவர் தொடர்ந்து 342 மணி நேரங்கள் தலைமுடியை வெட்டி அழகுபடுத்தினார்.

கைவலிக்காதா ஜனாதிபதி அவர்களே!

அமெரிக்காவின் ஜனாதிபதி தியோடர்-ரூஸ்வெல்ட் 1907—ம் வருடம் ஜனவரி முதல் தேதி தன்னைக் காண வந்த 8513 பேருடன் கை குலுக்கினார். அதற்கப்புறம் 1982 ரேடியோ புகழ் காரிக்ரெய்க், தன் ரசிகர்கள் 15,000 பேருடன் கை குலுக்கிச் சாதனை படைத்து விட்டார்.

திராட்சையைத் தூக்கிப் போட்டால் எவ்வளவு உயரம் போகும்?

மாசாசூசெட்ஸில் 1979 ஆக. 9—ம் தேதி, பால்டாவில்லா 270 அடி உயரம் ஒரு திராட்சையைத் தூக்கிப் போட்டு மறுபடியும் திராட்சையை வாயிலே பிடித்து ரிக்கார்டில் இடம் பிடித்தார்.

தலைமீதிருந்து பாட்டில் எப்போது விழும்?

அதிகநேரம் கைதட்டியே, கின்னஸில் ஒரு தடவை இடம் பெற்ற ஆஷ் ரிடா ஃபர்மன் எனும் ஜமைக்காவாசி இன்னொரு விஷயத்துக்காகவும கின்னஸில் இடம் பெற்றிருக்கிறார். 24 மைல் தூரம் தலை மீது ஒரு பால் பாட்டில் வைத்துக் கொண்டு, அது கீழே விழாமல் பாலன்ஸ் பண்ணியபடி நடந்தார்.

இது தவிர முப்பது நிமிடத்தில் 217 ஆம்லெட் தயாரித்தவர், 45 நிமிஷத்தில் 266 கிலோ உ. கிழங்கு உரித்தது, உரக்க விசிலடித்தவர், இப்படி நிறைய ரிகார்டுகள்.

கின்னஸ் புக் ஆஃப் ரிகார்ட்,
31—ம் பதிப்பு 1985
கிடைக்குமிடம்: ஹிக்கின் பாதம்ஸ், சென்னை—2.

தொகுப்பு: ஜீவி
புகைப்படங்கள்: யோகா

மார்ச்

சீக்கியர்
பிரச்சனைக்கு
தீர்வு

எதிர்க்கட்சிகள்

மே

சீக்கியர்களுக்கு
மேலும் மேலும்
சலுகைகள்

அந்தக் கீர்த்தனாரம்பத்திலே 'பவர்கட்',
'பவர்கட்' என்கிற அசுரன் உலகையே
இருள் மயமாக்கி வந்தான். வருகிற ஜூன்
15ந் தேதி 'பவர்கட்' அசுரன் ஒழியப்
போகிறான்!.. கோவிந்த நாம சங்கீர்த்தனம்..

மாநில பட்ஜெட்

அரசு சலுகைகள்

விலைவாசி
உயர்வு

பண்ருட்டி

மத்திய பட்ஜெட்

கோவிந்தா
கோவிந்தா

கோவிந்தா!
கோவிந்தா!

கோவிந்தா..
கோவிந்தா...



# கல்கி

1985 மே 12
மலர்: 43 இதழ்:41
குரோதன சித்திரை 30



## அமெரிக்க அதிபரின் அசுரத் திட்டம்

'உலகம் என்று இருந்தால் தானே, மனிதன் என்று வாழ்ந்தால் தானே பிரச்னைகள்? எல்லாப் பிரச்னைகளுக்கும் ஒரேயடியாகத் தீர்வு காணச் சிறந்த உபாயம் உலகையே, மனித இனத்தையே அழித்து விடுவதுதான்' என்று அமெரிக்க அதிபர் ரேகன் முடிவு கட்டி விட்டார் போலும்! ''ஸ்டார் வார்ஸ்'' என்று சினிமா பெயரைச் சூட்டி ஓர் அதி பயங்கர அணு ஆயுதக் கொத்தளத்தை விண்வெளியில் அமைக்கத் திட்டமிட்டிருக்கிறார்!

அணு ஆயுதங்களை உற்பத்தி செய்கிற உரிமையை வல்லரசுகள் நீங்கலான இதர நாடுகள் தாமாகவே துறந்து விட வேண்டும் என்று வற்புறுத்துகிற அமெரிக்கா, தான் மட்டும் அந்த லட்சியத்தை நோக்கி ஓர் அடி கூட எடுத்து வைக்கத் தயாராக இல்லை!

அணு ஆயுதங்களை வல்லரசுகள் சோதித்துப் பார்க்கக் கூடாது என்று கூற இதர நாடுகளுக்கு உரிமை இல்லாது போகலாம்; ஆனால் அந்தச் சோதனைகளின் விளைவாகப் பிற தேசங்களின் சுற்றுச் சூழல் நச்சு மயமாகிறதே, இப்படிச் செய்ய வல்லரசுகளுக்கு யார் அதிகாரம் அளித்தார்கள்? இது என்ன நீதி?' என்று கென்னடியைச் சந்தித்த போது கேட்டார் ராஜாஜி. அதன் பிறகு வல்லரசுகள், 'நீர், நிலம், ஆகாயம் ஆகியவற்றில் அணு ஆயுத சோதனைகளை நடத்துவதில்லை' என்று அறிவித்தன. ஆனால் பூமிக்கடியில் சோதனைகள் தொடர்ந்தன, அதில் ஆபத்தே இல்லை என்பது போல! என்ன ஏமாற்று வேலை இது!

இப்போது அணு ஆயுதங்களை ஏந்திய தானியங்கு ராக்கெட்டுகளை விண்வெளிக்குக் கொண்டு போய்க் கொத்தளம் அமைக்கத் திட்டம் போட்டிருக்கிறார் ரேகன். இதன் மூலம் உலகின் எந்த மூலை முடுக்கிலும் உள்ள எந்த இலக்கையும் அணு குண்டு ஏந்திய ஏவுகணைகளால் தாக்க அமெரிக்காவினால் முடியும். இப்படி உலக நாடுகள் அனைத்தையும் குறி பார்த்து ஒரு பட்டனைத் தட்டுவதன் மூலம் அழிக்க ரேகனுக்கு என்ன தார்மீக அல்லது சட்ட பூர்வமான உரிமை இருக்கிறது? கொஞ்சம் குறி பிசகினால், சிறு தவறு நேர்ந்தால் ஒரு நேச நாடே கூட அழிந்து போகுமே!

முக்கால் உலகத்தைப் பஞ்சமும் பிணியும் பீடித்துள்ள இந்நாளில், இவ்வாறு அணு ஆயுதம் தாங்கிய தானியங்கு ஏவுகணைகளைத் தயாரிக்கவும் விண்வெளிக்கு அவற்றைக்கொண்டுபோகவும்கோடானுகோடி டாலர்களைச் செலவிடுவது ஆபாசம் மட்டுமல்ல; அசுரத்தனம்.

அமெரிக்காவின் முந்நாள் பாதுகாப்பு அமைச்சர்களான மக்னமரா, க்ளிஃபோர்ட் ஆகிய இருவரும் ரேகனின் இந்தத் திட்டத்தைக் குறித்து அருவருப்படைந்து வன்மையாகக் கண்டித்திருக்கிறார்கள். 'ருஷ்யாவை விடப் பாதுகாப்பு அம்சத்தில் மிகவும் பலம் வாய்ந்த நிலையில் உள்ள அமெரிக்காவுக்கு இது அவசியமில்லை; இது மேன்மேலும் அணு ஆயுதப் போட்டியையே ஊக்குவிக்கும் என்று கூறியுள்ளனர்.

இது ஏதோ அமெரிக்காவுக்கும் ருஷ்யாவுக்கும் இடையேயான பூசல்; நமக்குச் சம்பந்தமில்லாதது என்று இதர நாடுகள் ஒதுங்கி வாளாயிருப்பது தற்கொலைக்கு ஒப்பாகும். இன்றையச் சூழலில் அணு ஆயுதப் போர் என்பது உலகம் முழுவதையும் அதன் ஒவ்வொரு உயிரினத்தையும் பாதிக்கிற பயங்கர விஷயம். ரேகனின் 'ஸ்டார் வார்ஸ்' திட்டத்துக்கு எதிராகச் சக்தி வாய்ந்த விதத்தில் உலக அபிப்ராயம் உருவாக வேண்டும்.

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்




உபயோகியுங்கள் டார்டாய்ஸ் கொசுவர்த்திச் சுருள்
விரடுங்கள் கொசுக்களை நெருக்கடி கொடுத்து.

# டார்டாய்ஸ் கொசு வர்த்திச் சுருள்






தயாரிப்பாளர்:
பாம்பே கெமிகல்ஸ் ப்ரைவேட் லிமிடெட்
:போர்ட், பம்பாய்-400 023. :போன்: 273831

everest/85/BCL/6-tm.

தமிழ்நாடு மற்றும் பாண்டிச்சேரிக்கு விநியோகஸ்தர்கள்: ஷாந்திலால் பிரதர்ஸ்,
7, காசிச் செட்டி சந்து, இரண்டாவது மாடி, சென்னை—600 001. போன்: 32886.

# வட்டமேஜை

* பறக்கும் தட்டுக்கள் பற்றிய ஆய்வுக்கட்டுரை சுவாரஸ்யமான சயன்ஸ் பிக்ஷன் படித்த நிறைவை அளித்தது.

சென்னை—11. பானுமதி மனோகர்.

* ஜெயமன்மதன், 'படிக்காத பண்ணையார்' என்று ஒரு படத்திற்கு விமர்சனம் எழுதியிருக்கிறாரே. அது தேசத்தில் எந்த மூலை முடுக்கில் ஓடுகிறது என்று தக்க ஆதாரத்துடன் நிரூபித்தால் சிறப்புப் பரிசு அளிக்கப்படும். டும்... டும்... டும்...

மதுரை—11. கே. சுகந்தி.

* காய்ச்சிய பாலுக்கும் கூச்சமுள்ள பெண்ணுக்கும் சுவை அதிகம் என்பதற்கு தராசு அளித்த விளக்கம் அருமை.

வெள்ளக்கோவில். கே. ஆர். கண்ணன்.

* தனியார் துறையை ஆதரிப்போரை பூர்ஷ்வாக்களின் கைக்கூலி என்று முத்திரை குத்துவார்கள். அதைப்பற்றிக்கவலையின்றி உண்மைநிலையை உணர்த்தியது தலையங்கம்.

சென்னை—5. குமரி ஜெய்.

* தொழில் துறையின் கிரியா ஊக்கியாகச் செயல்பட்ட சித்ரா நாராயணசுவாமியின் 81—வது பிறந்த நாள் விழாக் கட்டுரை எனக்குக் கிரியா ஊக்கியாக அமைந்திருந்தது.

நெல்லிக்குப்பம். ஜெ. முகம்மது பாரூக்.

* நமது டி.வி.யில் நகைச்சுவைக்கு எப்போதும் பஞ்சமில்லை. சாம்பிள் வேண்டுமா? வசுந்தரா தேவியிடம் 'மலரும் நினைவுகள்' பேட்டி. "எத்தனை வயதில் நடிக்க வந்தீர்கள்?" என்று கேள்வி. "18 அல்லது 20 இருக்கும்" என்றார் வசுந்தரா. "உங்கள் திருமணம் பால்ய விவாகம்தானே?" என்றகேள்விக்கு "ஆமாம், எனக்கு 8 வயதில் திருமணம்" என்று பதில் சொன்னார் வ.தேவி. அத்துடன் விட்டிருக்கலாம். அப்படியென்றால், "தாங்கள் திருமணமான பின்தான் நடிக்க வந்தீர்கள் இல்லையா?" என்று மட்டையைப் பிளந்தார் பாருங்கள், பேட்டியாளர்! எனக்குச் சிரிப்பு பொத்துக் கொண்டது.

சென்னை-3 ஸ்ரீ. சீனிவாசன்

* தனக்குப் பிடித்த சாதனையாளர் பற்றிக் கூறுகையில் சீதா ராகவன், 'திருமதி சந்திரா ஆதேமாதத்தில் சி. ஏ. ஆனார்' என்று கூறியிருக்கிறார். தகவல் தவறு. சி. ஏ. மூன்றாண்டு காலப் படிப்பு.

மேட்டுப்பாளையம். டி. சந்தானம்.

* ஆபத்துக்கு உதவும் அமைப்பு Golden Hour பற்றிய கட்டுரை அனைவருக்கும் பயன்படும் விவரங்களை அளித்தது.

தோழுந்தூர். சி.சுப்பு.



* இருபத்தோராம் நூற்றாண்டு இளைஞனுக்குத் தமிழன்பன் விட்ட அறைகூவல்கள் வசந்த அழைப்புக்கள். புலிகள் பிறக்காவிட்டால்போகிறது-பூனைகள் பிறக்க வேண்டாம்!

கோவை—16. ரம்யா.

* 'கிணற்றுக்குள் பூதம்' சிறுகதை மனித உள்ளத்தின் இயலாமையையும், உணர்ச்சிக் குழப்பங்களையும் தெளிவாகப் படம் பிடித்திருந்தது. கங்க்ராட்ஸ்.

கிருஷ்ணகிரி. ஆர். பூபாலன்.

* மிஸஸ். கமலா கடுகு வாங்கிய காரை ஆப்கானின் தான் பேரீச்சம் பழத்தின் மதிப்பிற்குக் குறையாமல் விற்க முனைந்த மிஸ்டர் கடுகு சிரிப்பைத் தாளித்துத் தீர்த்து விட்டார்!

ஸ்ரீரங்கம். ஆர். கோபாலன்

* வாசகர்களின் அமானுஷ்ய அனுபவம் ஒவ்வொன்றும் மயிர்க் கூச்செரிய வைத்தன.

சென்னை—5. எஸ். சம்பத்குமார்.

* முதல்வரின் சிகிச்சைக்குரிய 90 லட்சம் ரூபாயை அ. தி. மு. க. கட்சிப் பணத்திலிருந்து அரசாங்கத்திற்குக் கட்டிவிடுவதாகச் சொல்லிவிட்டு பொது மக்களிடமிருந்து "பல வழி"களில் வசூல் நடக்கிறது. மாநில அரசு ஊழியர்களிடமும் நிர்ப்பந்த வசூல். வசூல் வரம்பைக் கடந்து 90 லட்சத்திற்கு மேலே நிதி வந்தால் கட்சி நிதியில்தானே சேர்ப்பார்கள்? அப்படியின்றி முதல்வரின் பொது நிவாரண நிதியில் சேர்ப்பதுதான் தர்மமாகும்.

சென்னை—4. சிவசக்தி.

(கடைசிக் கடிதம் பரிசு பெறுகிறது.)

# தொண்ணூறு லட்சத்தைத் தொட்டுவிட்டால்?

# ஆத்ம திருப்திக்கு அபூர்வ ராகங்கள்

## பாலசந்தர்

**எஸ். வி. ரமணன்: ''வேடிக்கையா 'குட்டும் திட்டும்' கிற தலைப்பிலே ஒரு கேள்வி வந்திருக்கு.''**

கே. பாலசந்தர்: ''ரொம்ப நல்லா இருக்கே. இதையே என் அடுத்த படத்துக்குத் தலைப்பா வெச்சுக்கலாம் போல இருக்கே!''

**கேள்வி (30): உங்கள் மோதிரக் கையால் குட்டுப் பட்டவர்கள் பலர் இன்று ஓகோ என்று இருக்கிறார்கள். நீங்கள் யாருடைய மோதிரக் கையால் குட்டும், திட்டும் பெற்றீர்கள்? (க. அசோக்பாபு, மணப்பாறை.)**

கே. பாலசந்தர்: எம். ஜி. ஆர். என்ற ராசியான கரம் என்னைத் திரைத்துறைக்கு அறிமுகம் செய்ய, குட்டுப்பட்டதென்னவோ ஆர். எம். வீ. அவர்களின் மோதிரக் கையினால். அதாவது நான் வசனமெழுதிய முதல் திரைப்படத்தின் பாதி வசனங்களை அடித்துத் திருத்தி, செம்மைப்படுத்தினவர் ஆர். எம். வீரப்பன்தான். இத்தனைக்கும் நான் அப்போது பெயர் பெற்ற நாடக ஆசிரியன்.

**கேள்வி (31): நீங்கள் ஏன் குழந்தைகளுக்காக, குழந்தைகளை வைத்தே, குழந்தைகள் ரசிக்கக் கூடிய தேசிய ஒருமைப்பாட்டை வலியுறுத்துகிற ஒரு படம் எடுக்கக் கூடாது? (திருமதி. சுமதிராகு, அசோக்நகர்.)**

கே. பாலசந்தர்: அப்பாடா! இந்தக் கேள்விக்காக நான் ரொம்ப சந்தோஷப்படறேன்! இதுவரைக்கும் நான் எடுத்தவை எல்லாம் குழந்தைத்தனமா இருக்குன்னு நீங்க ஒத்துக்கலே (சிரிப்பு). நிஜமாவே, குழந்தைககளுக்காக ஒரு படம் எடுக்கணும்கிற எண்ணம் இப்போ உதயமாயிருக்கு. சரியான கருத்தும், கதையும் தோன்றியவுடன் நிச்சயமா அந்த முயற்சியில் ஈடுபடுவேன்.

**கேள்வி (32): அகில இந்திய ரீதியில் புகழேணியில் வீற்றிருக்கும் நீங்கள், உங்களையே சுயவிமர்சனம் பண்ணுங்கள் பார்க்கலாம்! (சியாமளா ஹரிஹரன், கோவை—9.)**

கே. பாலசந்தர்: ''சுய விமர்சனமா? என் சுய விமர்சனத்துக்கு 'கல்கி' யின் நேரம் நல்ல நேரம்' எப்படிப் போதும்? அவங்களோட நேரத்தை எனது விளம்பரத்துக்கு பயன்படுத்திக்கிறது எப்படி முறையாகும்? சொல்லுங்க பார்க்கலாம்!'

**கேள்வி (33): தாங்கள் ஏ.ஜீ.ஸ் ஆபீஸிலேயே தொடர்ந்து இருந்திருப்பின்...... (பத்மா ராஜன், பம்பாய்—71.)**

கே. பாலசந்தர்: ஏ. ஜீ'ஸ் ஆபீஸிலேயே, தொடர்ந்து இருந்திருந்தால், ஒரு கிளாஸ் II ஆபீஸராய் இருந்திருப்பேன்; ரூமுக்குள் உட்கார்ந்து கொண்டு மணியடித்து பியூனைக் கூப்பிட்டுக் கொண்டு இருந்திருப்பேன்; எத்தனை பென்ஷன் வருமென கணக்குப் போட்டுக் கொண்டு இருந்திருப்பேன்; ஒன்பதிலிருந்து, ஐந்து வரை வேலை செய்து விட்டு, வீட்டுக்கு வந்திருப்பேன்; பிரச்னைகளுடன் வாழ்ந்து கொண்டு இருந்திருப்பேன்.

**கேள்வி (34): இதுவரை நீங்கள் டைரக்ட் செய்த படங்களில் உங்களுக்கு மிகுந்த ஆத்ம திருப்தி அளித்த படம் எது? (ரேவதி பிரியன், ஈரோடு.)**

கே. பாலசந்தர்: நீங்கள் ரேவதிப் பிரியன் என்பதால், ரேவதியை வைத்து ஒரு படம் எடுத்த பிறகு, இந்தக் கேள்விக்கு பதில் சொல்கிறேன்.

**எஸ். வி. ரமணன்: நிஜமாவே, உங்களுக்கு ஆத்ம திருப்தி அளித்த படம் எது சார்?**

கே. பாலசந்தர்: சரி! சொல்றேன். ஆனா, ஒரே ஒரு படம்தான் சொல்லணும்னு கம்பல் பண்ணாதீங்க. அஞ்சு படம் சொல்லுவேன். 'நரேஷன்' புதுமைக்கும், கருத்துக்கும் 'புன்



# நேரம் நல்ல நேரம்

னகை;' அரசியல் விமர்சனத்துக்கு 'தண்ணீர் தண்ணீர்;' குடும்பக் கதைக்கு 'அவள் ஒரு தொடர்கதை;' எனது ஆத்ம திருப்திக்கு 'அபூர்வ ராகங்கள்,' உங்களையெல்லாம் முழுக்க முழுக்க கருத்தோடு சிரிக்க வைக்க 'பாமா விஜயம்.'

**கேள்வி (35): ''கவியரசு கண்ணதாசனின் பாடல்களுக்குப் பிறகு உங்கள் திரைப்படங்களில் வரும் வித்தியாசமான சூழ்நிலைகளுக்கு மனநிறைவு ஏற்படும் அளவிற்கு ஏதேனும் பாடல் அமைந்திருக்கிறதா?'' (டி. அகிலா, திருக்கோவிலூர்.)**

கே. பாலசந்தர்: ''கண்ணதாசன் அவர்கள் மற்ற பாடல்களையெல்லாம் எழுதிவிட்டு, அவர் விட்டுச் சென்ற ஒரு பாடலை தண்ணீர் தண்ணீர் படத்துக்காக எடுத்த போது, வைரமுத்து அவர்களை அந்தப் பாடலை எழுதச் சொன்னேன். அவர் எழுதின அந்தத் தாலாட்டுப் பாடலில் குழந்தையை இடுப்பிலுள்ள நந்தவனம் என்று குறிப்பிட்டார். அவருடைய இந்த வரியைப் பார்த்து நான் மெய்சிலிர்த்துப் போனேன். இப்படி இன்னும் பல பாடல்களை அவர் எழுத ஆரம்பிச்சிருக்கார்.''

**கேள்வி (36): ''இந்த இளைஞர் ஆண்டில் தாங்கள் இளைஞர்களுக்குக் கூற விரும்பும் அறிவுரை என்ன?'' (இரா. ரவிச்சந்திரன், பழனி.)**

கே. பாலசந்தர்: ''இளைஞர்களுக்கு ஒன்றைமட்டும்சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். அதிகமா சொன்னா, இவரு யாரு அட்வைஸ் பண்ணன்னு சொல்லிடுவாங்க. 'எங்க இப்படி வந்தே?' ன்னு கேட்டா, 'சும்மாத்தான் வந்தேன்'ங்கிற பாணியில இல்லாம, எதற்கும் ஒரு குறிக்கோள் இருக்கட்டும். ஒரு குறிக்கோளுடன் படியுங்கள்; ஒரு குறிக்கோளுடன் உழையுங்கள்; ஒரு குறிக்கோளுடன் செயல்படுங்கள்; இதுவே என் அறிவுரை.

**கேள்வி (37): ''பாலசந்தர் படமா அது படிச்சவங்களுக்குத்தான் புரியும். இப்படி ஒரு அபிப்ராயம் பலரிடம் நிலவி வருகிறதே! இது பற்றித் தங்கள் கருத்து யாது?'' (ந. மைத்ரேயி, சின்ன காஞ்சிபுரம்.)**



• மோதிரக்கை.

கே. பாலசந்தர்: ''இப்போ என்னுடைய பாணி தப்புன்னு சொல்றீங்களா? இல்லே, கரெக்ட்னு சொல்றீங்களா? இன்னும் பாமர ரஞ்சகமா எடுக்கச் சொல்றீங்களா? நீங்க எதை விரும்பறீங்க? இப்படிப்பட்ட கேள்விகள்தான் எந்த திசையில் நான் போவது என்பதையே அவ்வப்போது என்னைக் குழப்பிவிடுகின்றன. அதாவது ஒவ்வொரு கருத்தையும் ஒவ்வொரு முறையில சொல்ல வேண்டியிருக்கு. சில கருத்துக்களைப் பாமரத்தனமாச் சொல்லணும்; வேறு சில கருத்துக்களைக் கொஞ்சம் நாசூக்காச் சொல்லணும். இப்படிப்பட்ட சூழ்நிலைகளிலும், நிர்பந்தங்களிலும் மாட்டிக்கிட்டிருக்கோம் என் போன்ற டைரக்டர்கள்.

**கேள்வி (38): ஒரு படம் வெளிவரும் முன்னும், வெளிவந்த பின்னும் அதுகுறித்து உங்கள் மனநிலை எப்படி இருக்கும்? (பாலா. அசோக், திருச்சி—20.)**

கே. பாலசந்தர்: படம் வெளிவருகின்ற வரைக்கும் ஒரு பெரிய டென்ஷன் — இமாலய 'டென்ஷன்;' அது அனுபவிச்சவங்களுக்குத்தான் தெரியும். வெளிவருகிற அன்று மாபெரும் 'சஸ்பென்ஸ்' — ஆல்ஃபிரட் ஹிட்ச்காக் சஸ்பென்ஸ் அளவுக்கு. ஷோ நடக்கும் போது பெரிய 'த்ரில்.' அதுவும் உணர்ந்து பார்த்தாத்தான் தெரியும். முதல் காட்சி முடிந்ததும் துக்கமோ, சந்தோஷமோ உங்கள் தீர்ப்பைப் பொறுத்தது. அதுவும் ஒரு வாரந்தான். மீண்டும் அடுத்த பட முயற்சியில் இறங்கிடுவோம். அது ஒரு சைக்கிள். இதுதான் சினிமாத்துறையில் எல்லாருடைய அனுபவமும்.

தொகுப்பு: **மௌனஷ்மி**



• அப்புறம் பதில்.

• ஆத்ம திருப்தி.

# ஒரு பெற்றோருக்கு தம் மகள் அல்லது மகன் மணம்முடித்து அவர்கள் நல்ல வாழ்க்கை நடத்துவதைப் பார்ப்பதிலே உள்ள மகிழ்ச்சிக்கு ஈடு இணை எதுவும் இல்லை

A.S. VEDA NARAYANAN
Res: 422-7676
A-7, SANCHAR
PRABHADEVI TEL. QRS.
BOMBAY 400 028
28th Feb. 1985

The Editor
The Times of India
Bombay.

Sir,

I am very glad to inform you that my response to Matrimonial ad in the T.O.I. 18-3-1984 Box No. K-280 materialised successfully. It is now nearing one year. I had sent you an invitation with a similar letter on 18th Aug. 1984.

This is the third successive marriage in our family, which materialised through the Times Matrimonial ads. I am now advising my friends in this regard.

Thanking you,

Yours faithfully,

(A.S. Veda Narayanan)

நன்றி தெரிவித்து வாரந்தோறும் வந்து குவிந்திடும் கடிதங்களில் ஒன்றாகும் இது.
வேண்டிக் கேட்பதன் பேரில் இந்தக் கடிதங்களை எங்கள் அலுவலகத்தில் பார்க்கமுடியும்.

**தேர்வுக்குரிய ஒருவிஷயம்,**
**டைம்ஸ் ஆஃப் இந்தியாவின்**
**திருமணப் பத்திகள்**

**THE TIMES OF INDIA**

ACIL-BC-38/85E-Tam.

> ''பையன் பாங்கில் வேலை பார்க்கிறவன், கண்ணை மூடிண்டு பொண்ணைக் குடுக்கலாம்.''
>
> ''பொண்ணு வேலைக்குப் போறவள்... அதுவும் பாங்குன்னு மேலே பேசலாம்.''
>
> நாட்டிலே இப்படியாக பாங்க் வேலைக்கு ஒரு மதிப்பு.
>
> காரணம்?
>
> நிம்மதியான வேலை; சிரமம் குறைவு; நல்ல சம்பளம்; மற்ற வசதிகள்; வேலைப் பாதுகாப்பு. இப்படிச் சொல்கிறார்களே, விவரம் என்னவென்று பாங்க் ரெக்ரூட்மெண்ட் போர்டைச் சேர்ந்தவர்களிடம் பேசினோம்.

இப்போது பாங்குகளில் அதிக அளவில் தேர்ந்தெடுப்பு நடப்பது கிளார்க், டைப்பிஸ்ட், ஸ்டெனோ, ஆபீஸர் பதவிகளுக்குத்தான்.

கிளார்க்குகளுக்கு (டைப்பிஸ்ட், ஸ்டெனோ உட்பட) குறைந்த பட்சக் கல்வித் தகுதி 10-ம் வகுப்பு. ஆனால் வேலை கிடைப்பதென்னவோ 10-ம் கிளாஸ்காரர்களுக்கில்லை. டிகிரி படிப்பவர்கள், படித்தவர்களுக்குத்தான். வயது வரம்பு 18–26. சில பாங்குகளில் எந்த வேலைக்குமே குறைந்த பட்சத் தகுதியே டிகிரி; வேறு சிலவற்றில் டைப்பிஸ்டுகளுக்கு டிகிரி வாங்கினவர்கள் தகுதி இல்லை என்று விதித்திருக்கிறார்கள்.

ஆபீஸர் பதவிக்கு 'மினிமம்' தகுதி பட்டப் படிப்பு. வயது வரம்பு 21–28 (வ. வரம்பு வித்தியாசப்படலாம்.)

எப்படித் தேர்வு செய்கிறார்கள்?

முதலில் எழுத்துத் தேர்வு. பின் இண்டர்வியூ. (டைப்பிஸ்ட், ஸ்டெனோக்களுக்கு ஸ்கில் டெஸ்ட் என்கிற டைப்பிங், ஷார்ட்ஹாண்ட், டெஸ்ட் தனி.) தேறினால் 'அப்பாயிண்ட்மெண்ட்.'

எழுத்துத் தேர்வு பற்றிச் சில வார்த்தைகள். சரியான விடையை தேர்ந்தெடுக்கிற 'அப்ஜெக்டிவ்' டைப்பில் கேள்விகள் இருக்கும். கொடுக்கப்பட்ட நேரத்தில் சரியான விடைகளை 'டிக்' அடிக்க வேண்டியதுதான்.

இது தவிர ஆங்கிலக் கட்டுரை, கடிதம் எழுதுவது, சுருக்கி வரைதல் உண்டு. 'அப்ஜெக்டிவ் டைப்' டெஸ்ட்டில் ஆங்கில அறிவும் கிடுகிடுவெனக் கணக்குப் போடுகிற திறமையும் சோதிக்கப்படும். தவிர கொடுக்கப்பட்டுள்ளவற்றில் எந்த இரண்டு ஒரே மாதிரி என்று கண்டு பிடித்து டிக் பண்ணுகிற வகைக் கேள்விகளும் இருக்கும். இவை 'கிளரிகல் அப்டிடியூட்' டை ஆராய்வன.

பரீட்சைக்குத் தேர்வுக் கட்டணம் உண்டு. கிளார்க் தேர்வுக்கு ரூ. 20. ஆபீஸர் பரீட்சைக்கு ரூ. 40. (பாங்கிற்கேற்ப வேறுபடலாம்.)

பரீட்சை வெவ்வேறு ஊர்களில் நடக்கும். விண்ணப்பத்திலேயே, தேர்வெழுதும் மையத்தைக் குறிப்பிட்டுவிட வேண்டும். இண்டர்வியூவும் அங்கேயே! பரீட்சை எழுத, இண்டர்வியூவுக்குப் போய் வருகிற செலவுகளை நிர்வாகம் ஏற்காது. (விதி விலக்கும் உண்டு.)

பொதுவாக, செய்தித்தாள்களில் வருடம் ஒரு தடவை விளம்பரம் வரும். பேப்பர் பார்த்துக் கொண்டே இருந்தால் பிடிபட்டு விடும்.

எப்படியும் கிளார்க் வகைக்கு சுமார் 18000 பேரும், ஆபீஸருக்கு 5000 பேரும் தேர்ந்தெடுக்கப் படுவதாய் அனுமானம்.

சம்பளம் எப்படி? 'கை நிறைய.'

தகவல்:

**எஸ். சந்திரமௌலி**

# பாங்கில் வேலை பெறுவது எப்படி?



## வாரம் ஒரு கடிதம்

# இருள் ஒரு கவசமல்ல

இளைய தலைமுறையே!

சிந்திக்கத் தெரிந்தவனே! சிந்தைக் கினியவனே! நாமெல்லாம் கூடித் திட்ட வட்டமாக ஒரு தீர்மானம் செய்வோம்.

பொழுது போக்கு என்ற சொல்லையே நாம் மொழி நீக்கம் செய்துவிடுவோம்.

ஏனென்றால் போக்குவதற்கு அல்ல பொழுது.

ஆக்குவதற்குத்தான்.

நம்மவர்களில் பலருக்குப் பொழுது போக்கே வாழ்க்கை. கலை என்பது மனிதனின் வேர்வையைத் துடைத்து விட்டு மனசுக்கு மருந்து அளித்து அவனை அடுத்த கட்டப் பணிக்கு ஆயத்தப்படுத்துகிறது.

ஆனால் இங்கே கலை என்பது மனிதனின் வேர்வையைத் துடைப்பதற்கு மாறாக அவனது உதிரத்தை உறிஞ்சுகிறது.

மனசுக்கு மருந்து போடுவதற்கு மாறாக அவனுள் விஷம் விதைக்கிறது. கலையின் நோக்கம் காசு என்பதாக இருப்பதனால் அது அறிவுக்குக் கொள்ளி வைக்கிறது; உணர்ச்சியைக் கிள்ளி வைக்கிறது.

பொழுதுபோக்கின் பெயரால்வருகின்ற பெரும்பாலான கலைகள் புலன்களைத் திருகி விடுகின்றன; ரகசியமாகவும் வெளிப்படையாகவும் வருடி விடுகின்றன.

பாமரர்களைப் போலவே அந்தச் சூழ்ச்சி அறியாத இளைஞர்களும் இதற்கு இரையாகிறார்கள்.

தீயை வெளிச்சமென்று கருதிச் சிறகு கருகுகின்றன விட்டில்கள்.

புலன்களின் பசி நியாயமானது.

ஆனால் புலன்களின் பசி புலன்களையே தின்று விடுவது அநியாயமானது.



அரை நிர்வாணப் படங்கள், குடலைப் புரட்டும் இரட்டை அர்த்த வசனங்கள் கண்களைத் தின்னும் சுவரொட்டிகள். பாலுணர்ச்சி மட்டுமே வாழ்க்கை என்று போதிக்க வரும் புத்தகங்கள். இந்த ராட்சஸக் கரங்கள் இளைஞனின் வலிமையையும் திறமையையும் பிழிந்து கொண்டிருக்கின்றன.

இந்த அழுக்கு இடங்களில் விழாத இளைஞர்கள் ஒரு தலைமுறையையே ஜெயித்துக் கொண்டிருக்கிறார்கள். இதில் விழுந்துவிட்டவர்கள் ஒவ்வோர் உதயத்திலும் இறந்து கொண்டிருக்கிறார்கள்.

மேலோட்டமான இலக்கியம், மேலோட்டமான அரசியல், மேலோட்டமான பார்வை, இப்படிப்பட்ட தக்கை வாழ்க்கை தகாது.

யோசித்துப் பார்த்த போது எனக்கு இப்படித்தான் விளங்கியது.

இளைஞனே! வாழ்க்கையை விட்டுத் தப்பிக்க வேண்டும் என்று தான் நீ கனவுகளை உண்டு காலங்கழிக்கிறாயா?

வெளிச்சத்தை விட இருளே உனக்குக் கவசமென்று எண்ணுகிறாயா?

தற்காலிக சுதந்திரங்களால் நீ நிரந்தர அடிமையாய் இருப்பதை நினைத்துப் பார்.

சிந்திக்கத்தெரியாதவனை மன்னிக்கலாம்.

ஆனால் சிந்திக்க மறுப்பவனை மன்னிக்க முடியாது.

**கவிஞர் வைரமுத்து**

படம்: யோகா



# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி-1985

அமரர் கல்கி அவர்களின் நினைவாக ஆண்டுதோறும் நடக்கும் இந்தச் சிறுகதை போட்டியில் வழக்கம்போல் இந்த ஆண்டும் எழுத்தாளர்கள் பெருமளவில் உற்சாகத்துடன் கலந்து கொண்டு ஒத்துழைக்க வேண்டுகிறோம்.

| | | |
|---|---|---|
| முதல் பரிசு | | ரூ 1000 |
| இரண்டாவது பரிசு | | ரூ 500 |
| மூன்றும் பரிசு | (இரு கதைகளுக்கு தலா ரூ 250 வீதம்) | ரூ 500 |

ஆக மொத்தம் ரூ 2000 பரிசுகளாக வழங்கப் பெறும்.

தவிர பிரசுரத்துக்கு ஏற்கப்படும் ஒவ்வொரு கதையும் ரூ 100 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர்களுக்குப் போனஸ் உண்டு.

* கதைகள் சொந்தக் கற்பனை என்றும், கதை வேறு எந்த உருவிலும் பிரசுரமானதில்லை என்றும் உறுதிமொழி தேவை.

* அறிமுக எழுத்தாளர் எனில் இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லை என்றும் போட்டி முடிவு அறிவிக்கப்படும் வரை எழுத மாட்டேன் எனவும் உறுதி மொழி தர வேண்டும்.

* நடுவர் குழு கதைகளைப் பரிசீலித்துப் பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுக்கும்.

**கதைகளை 'அனுப்ப வேண்டிய கடைசி தேதி: ஜூன் 15**

* உறையின் மேல் அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி என்று குறிப்பிடுதல் அவசியம்.

* பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளைத் திரும்பப் பெறப் போதிய அளவு தபால் தலை ஒட்டிய சுய விலாசமிட்ட உறையைக் கதையுடன் கூடவே அனுப்புதல் வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.

* கதைகள் கல்கியில் நாலு பக்கங்களுக்கு மேற்படாதிருப்பது நலம். ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.

* எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் கிடையாது.

* சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

* போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் கல்கி ஆகஸ்டு 4 ஆண்டு மலரில் பிரசுரமாகும்.

ஆசிரியர், கல்கி, சென்னை—600 032.

# மௌனப் புயல்

வாஸந்தி

5

பொற்கோவிலுக்குள் ராணுவப் பிரவேசம் செய்வதற்குச் சில மாதங்களுக்கு முன் —

குருசரன் ஸிங்கிற்குப் பொறுமை நழுவிக் கொண்டிருந்தது. ஆறரை மணிக்குள் நாடகக் குழு அமிருத்ஸரை விட்டுக் கிளம்பி விட வேண்டும் என்று நேற்று இரவு திரும்பத் திரும்ப எல்லோரிடமும் சொல்லியிருந்தார். இப்போது ஆறு நாற்பது. ஜொகீந்தர் ஸிங் இன்னும் வரவில்லை. நாடகத்தின் முக்கியமான நடிகன்.

வேன் தயாராகத் தெருவில் நின்றிருந்தது. குழுவைச் சேர்ந்தவர்கள் பாதிப் பேர் வண்டிக்குள்ளேயும் மிகுதிப் பேர் வெளியிலேயும் இருந்தார்கள். டிரைவர் கிர்பால் ஸிங் எதிர்த்த பக்கம் இருந்த கடையில் நின்று ஒரு பஞ்சாபி தினசரியைப் படித்துக் கொண்டிருந்தான்.

இளம் நீலமும் பழுப்பும் கலந்த தனது கூரிய கண்களால் குருசரன் ஸிங் தெருக் கோடி வரை அளந்தார். தெரு ஒரு மறைமுக சோகத்தை அனுபவிக்கிற மந்தத்துடன் இருந்தது. முன்பெல்லாம் நான்கு மணியிலிருந்தே பொற்கோவிலுக்குச் செல்லும் பக்தர்களின் ஆரவாரம் தூங்கு மூஞ்சிகளையும் படுக்கையிலிருந்து நிமிர்த்தி வைக்கும். இப்பொழுது ஒரு வெறியன் உள்ளே உட்கார்ந்திருப்பதால் எல்லாருக்கும் நெறியைக் காக்கத் தயக்கம் வந்து விட்டது. ஹிந்துவோ ஸிக்கோ எவனானாலும் பிறந்ததிலிருந்து கேள்வியே எழாத பக்தி சிரத்தையுடன் இங்கு காத்து வந்த வழக்கம். இயல்பான நியதியாய், சகோதரர்களாய் அவர்களைப் பிணைத்த கலாசாரம். பெண் கொடுக்கலும் வாங்கலும் இரு பிரிவினரிடையே சர்வ சகஜம். மூத்த மகனைக் குருத்வாராவிற்கு அர்ப்பணம் என்று சீக்கியருக்கும் ஹிந்து குடும்பங்கள் அநேகம்...

இந்த அருமையான பாரம்பர்யத்தை உணர்ந்து கொள்ளாத அந்த வெறியன் இந்தப் பஞ்சாபின் சரித்திரத்தையே அழிக்கப் போகிறான். அவனது செயல்களால் ஜனங்களுக்கு முக்கியமாக ஹிந்துக்களுக்கும், அவனை எதிர்க்கும் சீக்கியர்களுக்கும் பயத்தின் எல்லையை காண்பித்து விட்டான். இப்பொழுது கோவிலுக்குச் செல்லும் பக்தர்களின் எண்ணிக்கையே குறைந்து விட்டது. அகாலிகள் வாயை மூடிக் கொண்டிருக்கிறார்கள். அரசு வேடிக்கை பார்க்கிறது. இடையே—

இந்த மறைமுக சோகத்தை அனுபவிக்கிற மந்தத்துடன் தெரு நிற்கிறது. மூடிய கதவுகளுடன் இப்பவும் அர்தாஸ்* நடக்கிறது. மதத் தலைவர்கள் ஹுக்கும் நாமாவை* வாசிக்கிறார்கள். அதற்குப் பிறகு இரந்தக் 'கீர்த்தனைகள்' பாடப்படுவது லௌட் ஸ்பீக்கரில் எல்லாத் தெருக்களுக்கும், மூடிய கதவுகளுக்குள்ளும் கேட்கிறது. ஆனால் முன்பிருந்த ஜீவன் இப்பொழுது இல்லை. மனத்தை முன்பு தெளிவு படுத்திய கீதங்கள் இப்பொழுது குழப்பத்தை விளைவிக்கின்றன — சகோதரர்களைப் பிரிக்கும் பிடிவாதத்துடன் உள்ளே அமர்ந்திருக்கும் — மனிதனினால் — அவனை அடக்கத் தெரியாத அல்லது அடக்க விரும்பாத கையாலாகாத பதவி மோகம் பிடித்த அரசியல்வாதிகளால் —

'இவர்கள் முட்டாள்கள், உங்களை ஏமாற்றுகிறார்கள், உங்கள் எதிர்காலத்தைப் பணயம் வைத்து விளையாடுகிறார்கள், விழித்துக் கொள்ளுங்கள்' என்று நான் மண்டையில் தட்டுகிற மாதிரி எத்தனை நாடகங்கள் போட்டுவிட்டேன்! என் வார்த்தைகள் சீக்கிய அம்பலத்தில் ஏறுமா?



ஓ. ஆனால் இந்த அப்பாவி சீக்கியர்களின் அம்பலம் வேறு: மஞ்சி ஸாஹேப்பி*லிருந்து எவன் எந்த அபத்தத்தைச் சொன்னாலும் அதுதான் அவர்களது சிந்தனை அலைகளில் ஆழமான பாதிப்பை ஏற்படுத்தும்.

நான் மதசார்பில்லாதவன்; 'நாஸ்திகன்' என்று உள்ளேயிருக்கும் அந்த ஆளினால் ஒதுக்கப்பட்டவன். அவனது 'ஹிட் லிஸ்டில்'** இடம் பெற்றிருப்பவன் —

தெருக் கோடியில் ஜொகிந்தர் வருவது தெரிந்தது.

"வந்து விட்டான் சோம்பேறி", என்று உறுமியபடி குருசரன் ஸிங், வேனின் கீழ்ப் படியில் ஒரு காலை வைத்து நின்று கொண்டிருந்த கிஷன்லாலிடம் சொன்னார்.

கிஷன்லால் மெலிதாகப் புன்னகைத்தார்.

"அவனுடைய தாமதத்திற்கு சோம்பேறித்தனம் காரணமில்லை ஸாஹப். அவன் அர்தாஸிக்குப் போயிருப்பான். அது முடிந்து கீர்த்தன் ஆரம்பிக்கிறவரை ஹர்மந்திர் ஸாஹப்*பை விட்டு யாரும் வெளியேற

* குரு கிரந்த ஸாஹப்புக்குப் பிரார்த்தனை.

** குருவின் கட்டளைகள்

** சீக்கிய விரோதிகள் என்று தான் நினைத்தவர்களைக் கொல்ல பிந்திரன்வாலே வைத்திருந்த பட்டியல்.

* பொற்கோவிலின் எல்லையைச் சேர்ந்த கூடம். மதத் தலைவர்கள் அகாலிதல் காரர்கள் தங்கள் மத. கட்சிப் பிரசாரங்கள் செய்யும் இடம்.

* பொற்கோவிலின் மையம். பிரார்த்தனைக்கு மட்டும் பயன்படுத்தப்படும் இடம்.



முடியாது என்று உங்களுக்குத் தெரியும்."

குருசரன் ஸிங் சற்று யோசனையுடன் தூரத்தில் விரைந்து வந்து கொண்டிருக்கும் ஜொகிந்தரைப் பார்த்தார்.

"ஜொகிந்தரை மாற்றுவது அவ்வளவு சுலபமில்லை ஸாஹப்!"

கிஷண்லாலின் குரல் மெலிதாக, ஜாக்கிரதையாக ஒலித்தது. குருசரன் ஸிங் அவனை திடுக்கிட்டுப் பார்த்தார்.

"ஹர்மந்திர் ஸாஹப்புக்குப் போகக் கூடாது என்று நான் தடை விதித்ததேயில்லை கிஷண்! அப்படித் தடை விதிக்க நான் யார்?"

என்னைப் பற்றிய இந்த மாதிரி எண்ணம் இவர்களிடையே இருக்கிறதா என்கிற கவலையுடன் அவர் கேட்டார்.

"முன்பெல்லாம் நீயும் தினமும் அர்தாஸுக்குப் போவாய், இப்போது போவதில்லை ஏன்? என்னுடைய சகவாசத்தாலா?"

கிஷண்லால் அவரை நேரடியாகப் பார்க்காமல் ஜொகிந்தர் வரும் திசையைப் பார்த்தான்.

"இல்லை ஸாஹப்! முன்பு போல் கோவிலுக்குள் செல்ல ஹிந்துக்களுக்கு தைரியம் எங்கே எப்போது?"

குருசரன் ஸிங்கின் நெடிய உருவத்திற்குப் பொருத்தமில்லாத கலக்கம் அவரது கண்களில் நிழலாடியது.

"ஆ. அதுதான் இப்பொழுது பிரச்னை கிஷண்! ஹர்மந்திர் ஸாஹப்புக்கு நான்கு பக்கமும் வாசல்கள், பக்தர்களில் பேதமில்லை என்பதற்காக. அதற்கு நேரெதிரான கட்டிடத்தில் உட்கார்ந்து கொண்டு ஒருத்தன் இப்போது பேதத்தைப் பரப்புகிறான். அந்த நச்சுக் காற்று ஜொகிந்தர் மேல் படாமல் இருந்தால் சரி."

ஜொகிந்தர் சமீபம் வந்து விட்டான் என்கிற உணர்வில் அவர் மௌனமானார்.

ஜொகிந்தர் விரைந்து அருகில் வந்து "ஸத் ஸ்ரீ அகால்!" என்று வணங்கினான்.

"ஸத் ஸ்ரீ அகால்!" என்று அவன் முதுகைத் தட்டி குருசரன் புன்னகைத்தார்.

"கீர்த்தன் பாட தர்பாரா ஸாஹப்புக்குப் போய் விட்டாயோ என்று எனக்கு பயமாகி விட்டது! ஏறு! ரொம்பத் தாமதமாகி விட்டது. பிந்திரன்வாலேயின் கணிப்புப் படி சீக்கியர்கள் என்று சொல்லிக் கொள்ளத் தகுதியில்லாதவர்கள்தான் நாங்கள். அதற்காக எங்களைக் காக்க வைக்கலாமா?"

வேனிலிருந்த சீக்கியர்கள், டிரைவர் கிர்பால் ஸிங் உள்பட அவரது ஹாஸ்யத்தை ரசிக்கவில்லை என்பதை குருசரன் கவனித்தார். இத்தனை நாட்களாக அவர் எழுதும் நாடகங்களில் நடிக்கும் இவர்களுக்கு எந்த அளவுக்கு அவர் எழுத்து பாதிப்பை ஏற்படுத்தியிருக்கும் என்று அவருக்கு திட்டவட்டமாகப் புரியவில்லை.



"அப்போதே குக்கர் விசில் ஓசை கேட்டதே! இன்னுமா சமையலாகலே!"

இவர்களை மாற்றுவது அத்தனை சுலபமில்லை, கிஷண்லால் சொன்னது போல். இறுகிப் போய் இவர்கள் உட்கார்ந்திருப்பதிலிருந்து அது தெரிகிறது. இந்த இறுக்கத்திற்கு இன்றைக்குப் பரவியிருக்கும் நச்சுக் காற்றுத்தான் காரணம். இதுவரை பேதத்தைப் பற்றி யோசிக்கத் தோன்றியதேயில்லை. கற்பனைக்கு எட்ட முடியாத விஷயமானதாக அது இருந்தது. இப்பவும் நடைமுறைக்கு ஒத்துவராத ஆபத்தான விஷயம் என்று இவர்களது அடி மனத்துக்குத் தெரியும். கிராமப்புரத்து விவசாயிகள் அனைவரும் சீக்கியர்கள். அவர்களது விளைச்சலை வாங்கி விற்கும் நகர்புரத்து வியாபாரிகள் எல்லாம் ஹிந்துக்கள். பரஸ்பர திருமணங்களினால் சம்பந்தமாகியிருப்பவர்கள். இவர்களிடையே விரோதத்தைப் பரப்பி விட்டால் அந்தச் சமூகம் என்ன ஆகும்? எதற்காக இந்தப் பிரச்சாரம்? எதை சாதிக்க? நிரூபிக்க? கிர்பால்ஸிங் வெகு லாகவத்துடன் அமிருத்ஸரின் நெரிசல் மிகுந்த தெருக்களைக் கடந்து கிராண்ட் டிரங்க் ரோடுக்குள் நுழைந்ததும், குருசரன் ஸிங் சுய நினைவு வந்தவர் போல் ஜொகிந்தரைப் பார்த்து சிநேகிதமாகச் சிரித்தார்.

"சொல்லு ஜொகிந்தர், கோவிலுக்குப் போனாய் போலிருக்கிறதே. அங்கு ஏதேனும் விசேஷம் உண்டா?"

"ஒன்றுமில்லை. வழக்கம்போல் தான்" என்றான் ஜொகிந்தர் மழுப்பலாக.

"விசேஷமான வித்தியாசம் ஏற்பட்டுப் போனதை நீ கவனிக்காதது ஆச்சரியம் தான். பிந்தரன்வாலேயின் ஆட்களும் அவனும் தைரியமாக ஆலயத்துக்குத் துப்பாக்கிகளை சுமந்து கொண்டு அலைவதைப் பார்க்கவில்லை?"

ஜொகிந்தர் தலையைக் குனிந்து கொண்டு முணு முணுத்தான்.

"அவர்கள் அலைந்தால் எனக்கென்ன வந்தது?"

குருசரன் ஸிங் வேனில் மௌனமாக அவரது பார்வையைத் தவிர்த்தபடி உட்கார்ந்திருந்த மற்றவர்களைப் பார்த்தார். இவர்கள் பாமரர்கள். அரசியல் வாதிகள் இல்லை. இவர்களது மௌனத்திற்கு பயம் மட்டும் தான் காரணமா? நம்பிக்கையும் காரணமாய்...

''அவன் ஸெண்டருடைய ஆள். அகாலி களுக்கு எதிராய் அமர்த்தப்பட்டவன். அவன் அத்து மீறி நடந்தால் ஸெண்டர்தான் அடக்கணும். அடக்காமல் ஏன் உட்கார்ந்திருக்கிறார்கள்?''

கிர்பாலின் குரலில் இருந்த சூடு அவருக்கு ஆச்சரியமேற்பட்டது. அவரையும் தொற்றிக் கொண்டது.

''ஆமாம் கிர்பால்! மத்திய அரசு மிகப் பெரிய விஷப் பரீட்சை செய்து விட்டது. அந்த பயங்கரத்தைக் கண்டு இப்பொழுது விழிக்கிறது. இந்த விஷக்காற்றை சுவாசிக்க ஆரம்பித்து விட்ட ஜனங்கள் தான் பார், தங்களைத் தாங்களே அழித்துக் கொள்ளப் போகிறார்கள்.''

''யாதவர்கள் மாதிரி!'' என்றான் கிஷண்லால். ''கோஹாலி கிராமத்திலே ஒரு விஷயம் நடந்தது போனவாரம்!'' என்றான் கிர்பால் பாதையிலிருந்து பார்வையை விலக்காமல்.

''ஹிந்து கொலைகளைப் பற்றி கேள்விப்பட்ட பயத்திலே அந்த ஊரில் நாற்பது வருஷமா இருந்து வந்த மூன்று ஹிந்து குடும்பங்கள் வேறு ஊருக்குக் கிளம்பிப் போய் விட்டது. அது தெரிந்ததும் கிராமத்து சீக்கிய பெரியவர்கள் அவர்களைத் தேடிப் போய் திருப்பி அழைத்து வந்திருக்கிறார்கள். நாங்கள் இருக்கும் வரை உங்களுக்கு ஆபத்து வராது என்று!''

''நேற்று வரை நடந்த விஷயம் இது கிர்பால்!'' என்றார் குருசரன் ஸிங் யோசனையுடன்.

''பொது ஜனங்கள் எல்லாம் பயங்கர வாதத்தை ஆதரிக்க மாட்டார்கள் ஸாஹப்!''

''இன்றில்லாவிட்டால் நாளைக்கு ஆதரிக்கலாம்...''

''எனக்குத் தோன்றவில்லை'' என்றான் கிர்பால் தீர்மானமாக. ''மிகப் பெரிய அதிர்ச்சி ஏதாவது ஏற்பட்டால் ஒழிய...''

இப்பொழுது இந்த வாதத்தைத் தொடர்வது நல்லதற்கில்லை என்கிற உணர்வுடன் குருசரன் மௌனமானார்.

''இன்னும் அரை மணியில் குருதாஸ்பூர் போய் சேர்ந்து விடுவோம்'' என்றார் கிஷண்லால். அன்று மாலை அங்கு அவர்களது நாடக நிகழ்ச்சி இருந்தது — ''ஒரு நாற்காலி, ஒரு கிளர்ச்சி, காற்றில் அல்லாடுகிறார்கள் மக்கள்'' என்ற தலைப்பில்.

திடீரென்று ஒரு குலுக்கலுடன் வேன் நின்றது. பாதையின் நட்ட நடுவில் அழுகையும் ஓலமுமாக ஒரு பெரிய கும்பல் இருந்தது.

குருசரன் ஸிங் ஏதும் சொல்வதற்கு முன் கிர்பால் ஸிங் அவசரத்துடன் இறங்கியதைத் தொடர்ந்து வண்டியில் இருந்தவர்கள் அத்தனை பேரும் இறங்கி விரைந்தார்கள். கூட்டத்தை விலக்கியதும் கண்ணில் பட்ட காட்சியில் எல்லாருக்கும் நா உலர்ந்து போயிற்று. ஆறு ஹிந்துக்களின் உடல்கள் சுட்டு வீழ்த்தப்பட்டு... இன்னும் இரத்தம் உலரவில்லை. ஒரு விக்கித்த மௌனம் சுற்றி நின்றிருந்த சீக்கியரிடம். குருசரன் ஸிங்கிற்கு மார்பு படபடத்துக் கொண்டு வந்தது.

''எப்படி, எப்படி நடந்தது இது?''

''குர்தாஸ்பூருக்கு பஸ்ஸில் போய்க் கொண்டிருந்தோம். நாலைந்து பேர்கள் பாதையில் நின்று பஸ்ஸை நிறுத்தினார்கள். பெரிய பந்தூக் வைத்திருந்தார்கள். ஹிந்து ஆண்கள் எல்லாரும் வெளியில் வாருங்கள் என்றார்கள். நாங்கள் எல்லாரும் கதிகலங்கி ஊமையாகிப் போனோம். ஒவ்வொரு ஹிந்துவையும் அவர்கள் சுட்டுக் கொல்லும் போது பேடிகளாய் நின்றோம் ஸாஹப்!''

குற்ற உணர்வு தாங்காமல் இப்பொழுது அழும் அந்த சீக்கியனை குருசரன் ஸிங் துயரத்துடன் பார்த்தார்.

''போலீஸுக்குத் தகவல் தெரிவிக்க பஸ் போயிருக்கிறது.''

அன்புமிக்க வாசகர்களுக்கு,

மௌனப்புயலின் ஆரம்ப அத்தியாயத்தைப் படித்துவிட்டுப் 'புயலாகப் பாய்ந்திருக்கிறார்கள் சில வாசகர்கள். ஹிந்து'வின் எதிரி என்றும் கண்டித்திருக்கிறார்கள். இவையெல்லாம் அபத்தமான குற்றச்சாட்டுகள் என்பதை மேலே வளரும் நாவலின் அத்தியாயங்களிலிருந்து புரிந்து கொள்வார்கள் என்று நம்புகிறேன்.

நான் யாருடைய ஆதரவாளரும் இல்லை, எதிரியும் இல்லை. ஆனால் நிச்சயமாக வன்முறைக்கு எதிரி — அது எங்கு நடந்தாலும், எந்தக் காரணத்துக்காக நடந்தாலும். இந்த நாவலை எழுதுவதற்காக நான் பஞ்சாபுக்கு நேரிடையாகச் சென்றிருந்தேன். அங்கிருக்கும் சூழலையும், அரசியல் பின்னணியையும் மக்களின் இன்றைய மனநிலையையும் ஓரளவு கிரகிக்க முயன்றதில் ஏற்பட்ட மனத்துயரத்தை இந்த நாவல் பிரதிபலிக்கிறது.

இன்னமும் தீர்வு காண முடியாத ஒரு சூடான விஷயத்தைக் கையாளும் போது என் பொறுப்பு எத்தகையது என்கிற பரிபூரணப் பிரக்ஞை எனக்கு இருக்கிறது. நான் நடுநிலைமை தவறாமல் இருக்க வேண்டுமானால் இருதரப்பிலும் நடந்த தவறுகளைச் சொல்லாமல் இருக்க முடியாது. ஒரு தரப்பு தவற்றைச் சுட்டிக் காட்டும் போது மற்ற தரப்பினை ஆதரிக்கிறேன் என்று அர்த்தமில்லை. ஒரு துர்பாக்கிய நிலைமைக்கான காரணங்களை மனித நேயத்தோடு ஆராயத்தான் இந்த நாவல் முயற்சி செய்கிறது.

வாஸந்தி

கிஷண்லாலுக்கு இது எப்படிப்பட்ட பாதிப்பை ஏற்படுத்தும் என்று நினைத்துப் பார்க்கவே குருசரன் ஸிங்குக்குப் பயமாக இருந்தது. சீக்கியத் தோழர்களுடன் சேர்ந்து நில்லாமல், அவன் அந்தத்தருணத்துஉணர்ச்சிகள் ஏற்படுத்திய பேதத்தில் ஒதுங்கித் தனியாக நின்றது வேதனையைத் தந்தது. அவர் மறுபடியும் அந்த முகங்களை, சற்று நேரம் முன்பு வரை உயிர்த் துடிப்பு ஓடிய அந்த உடல்களைப் பார்த்தார்.

நிராயுத பாணிகள். குற்றமற்ற எளிய மக்கள். ஆயுதமில்லாதவனை, குற்றமற்றவனைக் கொலை செய்வது மகாப் பாவம் என்று சீக்கிய மதம் சொல்கிறது. இப்பொழுது வெறி பிடித்த ஒரு கூட்டம் அதே மதத்தின் பெயரில்....

போலீஸ் வந்து ரிப்போர்ட் எழுதிச் சடலங்களைத் தூக்கிச் செல்லும் போது எல்லாருடைய உணர்ச்சிகளும் சற்று அடங்கியே இருந்தாற் போல் அவருக்குப் பிரமையேற்பட்டது. இதற்குக் காரணம் பயமா, தடித்தனமா அல்லதுமௌன அங்கீகரிப்பா? அவர் தன் எண்ணப் போக்கை நினைத்து திடுக்கிட்டார். தன்னுடைய கடைசி அனுமானம் நிச்சயம் தவறானது என்று தனக்குள் சொல்லிக் கொண்டார்.

அன்றும் அதற்கடுத்த நாட்களிலும் சுற்றுப்புறக் கிராமங்களிலெல்லாம் குருசரன் ஸிங் அதிக தீவிரத்துடன் நாடகம் போட்டார். ஆவேசத்துடன் பேசினார்.

''சகோதரர்களே! இது வெறும் நாடகமில்லை. உண்மைக் கதை.. பஞ்சாபை நாசமாக்க முனைந்திருப்பவர்களைப் பற்றின கதை. சீக்கும் ஹிந்துவும் ஒன்றாகத்தான் இந்தமண்ணில்பிறந்தோம். ஒன்றாக இதைக் காத்தோம், வளர்த்தோம். இப்பொழுது அரசியல்வாதிகள், மதத்தில் அரசியலைப் புகுத்தப் பார்க்கும் வெறியர்கள் நம்மைப் பிரிக்கப்பார்க்கிறார்கள். குடிநீர்வசதியில்லை, கிராமங்களில் மின்சாரம் இல்லை, இளைஞர்களுக்கு வேலை வாய்ப்பு இல்லை. இந்த முக்கியமான பிரச்னைகளைஒதுக்கிவிட்டுதுவேஷப் பிரச்சாரம் செய்கிறார்கள். உலகம் எத்தனை உயரத்துக்குப் போயிருக்கிறது! நீங்களும் நானும் எந்த நிலையில் இருக்கிறோம்?

பதவிமோகம் பிடித்தவர்களின் நாற்காலிக்கு அடியிலும், சுயநலக்காரர்கள் நடத்தும்கிளர்ச்சிகளின் காலடியிலும்நசுங்கப்பட்டு ஏமாளிகளாக்கப்பட்டு —

நமது சகோதராகள் நம் கண் எதிரில் சுட்டுத்தள்ளப்படும் போது எதிர்க்கத்துணிவில்லாத நபும்ஸகர்களாக்கப்பட்டு—

நம்மை இப்படி ஆக்கியது யார்?

இந்த நாடகம் சொல்லும். இதோ —

ஏக் குர்ஸி. ஏக் மோர்ச்சா. ஹவாமே தடப்ரஹேஹன் ஹைஹன் லோக்!''

(தொடரும்)

அடுத்த வாரம்:



## ஒரு வருஷப் பிறப்பு வெகுமதி
## ஸன்ரைஸிடமிருந்து!

# ரூ.3/- தள்ளுபடி

ஒவ்வொரு ஸன்ரைஸ் 200 கிரா. ரீஃபில் பேக்கின் மீதும்!




உங்களுடைய வருஷப் பிறப்பை ஸன்ரைஸின் விசேஷ சலுகையுடன் துவக்குங்கள்!

உங்களுக்கு பிடித்தமான ஸன்ரைஸ் காப்பியின் ஒவ்வொரு 200 கிரா. ரீஃபில் பேக்கிலும் ரூ. 3/- மிச்சப்படுத்துங்கள்.

ஸன்ரைஸ், அந்த முதல் காப்பியின் புதுமலர்ச்சியளிக்கும் நறுமணத்தை ஒரு நாளில் எந்நேரத்திலும் மீட்டுப் பெற சிறந்ததொரு வழி!

முந்துங்கள்!
சலுகை சரக்கு
தீரும்வரை

**Nestlé**
# ஸன்ரைஸ்
இன்ஸ்டண்ட் காப்பி-சிகரி ப்ளெண்ட்

அம்மாவின் அந்த முதல் காப்பியின் புத்துணர்ச்சியூட்டும் நறுமணத்துடன்.

FSL-8663 TAM

கதிரேசனை யார் குட்டிச்சுவர் ஆக்கினார்கள்?

ஆத்தாபாளையம் ஹையர் செகண்டரி ஸ்கூலுக்கு எதிரில் இடையில் ஓடும் தார்ச் சாலை கடந்த எதிர்ச்சாரி கடைவரிசையில் ஒரு சலூனில் கோபாலகிருஷ்ணன் நின்று யோசித்தான். கூடக் கதிரேசனும் நின்றான்.

நாலு கடை தள்ளி ஆலமரத்தின் கீழ் நாலு பேர் நின்றார்கள். ஆளுக்கு ஓர் ஆயுதம் வைத்திருந்தார்கள். ஒரு கத்தியால் ஆலமரத்தை ஒருவன் 'அதுதான் கதிரேசன் மண்டை' என்று உருவகப்படுத்தி இந்த இரண்டு பேரும் பார்க்கும்படியாக ஓங்கி ஓங்கி அடித்துக் காட்டிக் கொண்டிருந்தான். ஆக்ஸா பிளேடு, சைக்கிள் செயின், ஒரு போலீஸ் லத்தி. இவை மற்ற ஆயுதங்கள்.

பஸ் அந்த ஆல மரத்தடியில் தான் நிற்க வேண்டும். கதிரேசனுக்கு விழப் போகிற தர்ம அடிகளை அனுமானித்துக் கருணை கூர்ந்து எக்காரணத்தைக் கொண்டும் பஸ்காரன் இங்கே நிறுத்த மாட்டான்.

அபாயச் சங்கு இப்படி அலறுகிற வேளையில் எழக் கூடாத விசாரம் தான் எனினும் கோபாலகிருஷ்ணனுக்கு அந்தத் தர்ம விசாரம் எழுந்து விட்டது.

கதிரேசன் பயப்படுவது தெரிந்தது. ஆனால் இன்னும் வீம்பை விடவில்லை.

"பரீட்சைன்னா காப்பியடிக்கிறது, 'பிட்' அடிக்கிறதுன்னு மாமூல் ஆய்ப் போச்சே! டி. ஈ. ஓ. ஆபீசுக்குப் போய் எம் பேரை ஹால் சூபர்விஷனுக்குப் போடாதீங்கன்னு சொல்லிட்டு வந்துடறது!"

தாக்கப்படப் போகிறோம் என்று நிச்சயமாகி விட்டது. இந்த நிலைமையை எப்படி எதிர் கொள்வது என்று யோசனை சொல்லாமல் கோபாலகிருஷ்ணன் இப்படி தர்மோபதேசம் செய்கிறானே என்று கதிரேசனுக்கு எரிச்சல். கூட ஒரே பள்ளியில் வேலை செய்கிறவன். காட்டிக் கொள்ள முடியுமா இந்த நேரத்தில்!

"நான் வேணும்னு தான் எழுதிக்கொடுத்தேன். போட்டுட்டாங்களேப்பா!"

"ஆத்தாபாளையம்னா அரிவாள் எடுக்கிற ஊர்னு வேற நம்ம ஸ்கூல்லே மிரட்டி அனுப்பிச்சாங்க. அப்பாலே 'அட்ஜஸ்ட்' பண்ணித்தானே நடக்கணும்?"

கதிரேசன் பொறுமையின் விளிம்பில் நின்றான்.

"இதோ பாரு பாலு! ஆத்தா பாளையத்துலே அருவா தூக்குவாங்க. சித்தாபேட்டைலே சைக்கிள் செய்னை எடுப்பாங்க. நாம என்ன பண்றது? கண்ணுக்கெதிரே ஒரு பொண்ணோ, பையனோ காப்பியடிச்சா கவனிக்காம விட்டுட முடியலியே. நாம வந்திருக்கிறது பசங்க நேர்மையா பரீட்சை எழுதறாங்களான்னு கண்காணிக்க. ஃப்ளையிங் ஸ்க்வாட் வேற போட்டிருக்காங்க. அஞ்சு நிமிஷத்துக்கு ஒரு தபா ஹெட்மாஸ்டர் வேறே எச்சரிக்கை பண்ணிக்கிட்டே இருக்கார்... அதெல்லாத்தையும் விடு.. நம்ப மனச்சாட்சி இடம் கொடுக்கலியே..."

# ஆத்தா பாளையம்— அரிவாள் எடுக்கும் ஊர்

## வையவன்

இவனை யார் குட்டிச்சுவர் ஆக்கினார்கள்? உலகில் நீதி பரிபாலனத்திற்கும் நியாய சம்ரட்சணத்திற்கும் தான்தான் உத்தரவாதம் என்று இவன் நினைக்கிறான்? ஒரு மேல் வருமானத்திற்கோ, சமூகத்தில் நாலு பேர் நிமிர்ந்து பார்க்கிற ஒரு கௌரவத்திற்கோ வக்கில்லாத வாத்தியார் உத்தியோகத்துக்கு வந்தது வந்தாயிற்று. அடி உதை என்ற அவமானம் வராமலாவது பார்த்துக் கொள்ளலாமே!

கோபாலகிருஷ்ணன் தொண்டை காய்ந்து விட்டதால் கூட்டி விழுங்கிவிட்டுக் கதிரேசனைக் கேட்டான்.

"நரசிம்மனுக்கு அக்கா மகள் பரீட்சை எழுதறா, கவனிச்சுக்கோன்னு ஒரு பையன் வந்து எக்ஸாமினேஷன் ஹால்லே சொன்னானா கதிரு?"

கதிரேசன் முகம் வெளுத்திருந்தது.

"எவனோ வந்து என்னமோ சொன்னான்! நரசிம்மன்னா என்ன தெரியும்? அவரு இந்த வட்டாரத்திலே பெரிய வஸ்தாதுன்னு எப்படி 'கஸ்' பண்றது? அவரு என்ன இண்டர்நாஷனல் ஃபிகரா?"

மனச்சாட்சி.

அந்த வார்த்தையைக் கேட்டதும், கோபாலகிருஷ்ணன் கதிரேசனை ஒருமாதிரியாகப் பார்த்தான். என்ன அபத்தமான வார்த்தையை உபயோகப்படுத்தி விட்டாய் என்று. இளக்காரமும் தொனித்தது. பரிதாபமும் தொனித்தது.

"ஏட வந்த நாலு பேரும் ஆங்கிளைக்குப் போகாம இப்படியே தொய்யலூருக்கு நம்ப கூட வந்திருந்தா நல்லா இருந்திருக்கும்!"

கதிரேசனுக்கு விவகார ஞானம் போதித்துப்



புண்ணியமில்லை என்று பேச்சை மாற்றினான் கோபாலகிருஷ்ணன்.

கூட வந்த நாலு பேர் ஆபத்தில் கைவிட்டு விடலாம் என்று போகவில்லை. ஐங்கிளை டவுனில் புதுப்படம் ரிலீஸ். ஏழெட்டு நாள் பரீட்சை ஹால் மேற்பார்வை என்றலாக்கப் தீர்ந்த ஆசுவாசத்தைக் கொண்டாட ஒன்றரை மணிக்கே கிளம்பிவிட்டார்கள்.

''சார்... அதோ அவங்க ஒங்களைக் கூப்பிடறாங்க!''

கதிரேசன் கோபாலகிருஷ்ணனைப் பார்த்தான்.

என்ன செய்யலாம் என்று ஒருவரையொருவர் பார்த்துக் கொள்ளும் போது சலூன் கடைக்காரர் கூப்பிட்டார்.

''வர முடியாதுன்னு சொல்லிடுங்க சார்!''

பையன் பதிலை வாங்கிக் கொண்டு ஓடினான். ஏழெட்டு நாளாக பஸ் விட்டு இறங்கி சலூன் கடையில் பேப்பர் படித்து ஒருநாள் ஷேவிங் செய்து ஒரு சின்ன பரிச்சயம் உருவாயிருந்தது. அந்த தாட்சண்ணியத்தில் அவர் உதவி செய்ய முன் வந்தார்.

''இவனுங்களுக்கு இதே தொழிலு சார்! போன தபா சூபர்விஷனுக்கு வந்த வாத்யாரை அடிச்சுட்டாங்க... ஆமா அங்கே ஸ்கூலாண்ட ஒரு போலீசுக்காரர் நிப்பாரே காவலுக்கு.''

கோபாலகிருஷ்ணன் ஒரு பாதுகாப்பு கிடைத்த தெம்பில் குறுக்கிட்டான்.

''எங்க ரூம்ல அந்தப் போலீஸ்காரரே ஒரு 'பிட்' எடுத்தாந்து பசங்ககிட்டே தர்றாரு! இதையெல்லாம் அவரு எங்கே கண்டுக்கப் போறாரு.''

கதிரேசனுக்குள் அவர்கள் சம்பாஷணை ஒரு பயனையும் விளைவிக்கப் போவதில்லை என்ற நிச்சயம் மூண்டது. உள்ளூர் சலூன் கடைக்காரர் ஒரு வெளியூரானுக்காக ஆயுதம் தாங்கியவர்களிடமிருந்து என்ன பாதுகாப்பு அளித்துவிட முடியும்? கோபாலகிருஷ்ணன் பார்வையில் இதெல்லாம் வேண்டாத வேலை.

''எக்ஸாமினேஷன் நடக்கும். பையன் காப்பி அடிப்பான். ப்ளையிங் ஸ்க்வாட் வருவான். நாம எச்சரிக்கையா இருக்கறப்பலே பாவலாவும் பண்ணணும். பையன்கிட்டே



## அருள்வாக்கு

பக்தியின் லட்சணத்தை பகவத்பாதர்கள் 'சிவானந்த லஹரி'யில் வெகு அழகாக வர்ணித்திருக்கிறார். ஐந்து உதாரணங்களைக் கொடுத்து வர்ணித்திருக்கிறார்... 'அழிஞ்சில் விதை எப்படித் தாய் மரத்துடனேயே ஒட்டிக் கொள்கிறதோ, ஊசி எப்படி காந்தத்தால் கவரப்படுகிறதோ, பதிவிரதை எப்படித் தன் பதியின் நினைவிலேயே ஆழ்ந்திருக்கிறாளோ, கொடி எப்படி மரத்தைத் தழுவி வளருகிறதோ, நதி எப்படிச் சமுத்திரத்தில் கலக்கிறதோ, அப்படியே பசுபதியின் பாதாரவிந்தங்களில் ஸதா ஸர்வ காலமும் மனத்தை அமிழ்த்தியிருப்பதுதான் பக்தி என்பது' என்கிறார் ஸ்ரீ ஆசார்யாள்.

ஏறு அழிஞ்சில் என்று ஒரு மரம் உண்டாம். அதன் காய் முற்றியவுடன் பூமியில் விழுந்து உடையும். உடனே உள்ளே இருக்கிற விதைகள் ஏதோ ஓர் ஆகர்ஷண சக்தியால் நகர்ந்து நகர்ந்து வந்து மறுபடியும் தாய் மரத்தோடேயே ஒட்டிக் கொள்ளும். ஒட்டிக் கொண்டபின் மூலமான மரத்துக்குள்ளேயே மறைந்துவிடும் என்கிறார்கள்.

பகவானிடமிருந்து பிரிந்து வந்திருக்கிற நாம் இப்படியே எப்போதும் அவன் பக்கமாக நகர்ந்து நகர்ந்து போய் முடிவில் அவனிடம் ஒட்டிக்கொண்டு ஒன்றாகி விடவேண்டும். ஊசி காந்தத்தை நோக்கிப் பாய்ந்து ஒட்டிக் கொள்வது அடுத்த உதாரணம். காந்தத்தில் சேர்ந்த ஊசிக்கும் காந்த சக்தி உண்டாகி அது மற்ற இரும்புப் பொருள்களை இழுப்பது போல் பக்தனுக்கும் பகவானின் குணங்களும் சக்திகளும் உண்டாகும் என்று இந்த உதாரணத்தால் காட்டுகிறார். அடுத்தது பதிவிரதையின் உதாரணம். பதிவிரதையின் நினைவு, பேச்சு, காரியம் அனைத்தும் பதியைச் சுற்றியே இருப்பது போல நம் மனோவாக்கு காரியங்கள் பகவானையே பற்றி இருக்கவேண்டும் என்பது இதிலிருந்து தெரிகிறது. பதியை மூல சுலோகத்தில் 'விபு' என்கிறார். சர்வ வியாபகன் என்பது இதன் பொருள். இதனால் பகவானை ஏதோ ஓர் இடத்தில் மட்டும் இல்லாமல் எங்குமாக எல்லாமாக இருப்பதாகப் பாவிக்க வேண்டும் என்று உணர்த்துகிறார்.

(நதியையும் கொடியையும் பற்றி அடுத்த வாரம்)

ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்

யும் நல்லபேர் வாங்கணும். டிபார்ட்மெண்ட்லேயும் நல்ல பேர் வாங்கிக்கணும். ஓரல்லே தலை குடுத்தாச்சு! ஒலக்கை விழறதுக்குள்ளே லகுவா எடுத்துக்கணும்."

இது அப்போதைக்கப்போது அவன் கொடுத்த அறிவுரை. அவனுக்கு அனுபவம் வழங்கிய பாடம் அது.

கதிரேசனுக்கு ஒன்று கைவரவில்லை. நீக்குப் போக்கு. இரட்டை வேடம் போடுவது ஒரு பிழைப்பா? அப்படிப் பிழைத்து என்ன வாரிக் கொள்ளப் போகிறோம்!

உத்தியோகம், சொந்த வாழ்க்கை எல்லாவற்றிலும் அவன் மனசு லட்சுமணன் கிழித்த கோடு மாதிரி ஓர் எல்லைக்குள் அடங்கும். இப்படிப் பிழைக்கத் தெரியாத கணவன் வாய்த்ததற்கு அவன் மனைவி சுலோசனாவுக்கு மனத்தாங்கல் உண்டு.

"நாலு பேராட்டம் நயமாப் பேசி பக்குவமா நடந்துக்காட்டி காலம் தள்ள முடியுமா இந்த ஒலகத்திலே!" என்று நச்சரித்து நச்சரித்து ஓய்ந்து விட்டாள்.

இப்போது ஆத்தாபாளையம் அந்த ஆல மரத்தடியில் ஆயுதம் ஏந்தி நிற்கிறது!

"நான் என்ன தப்பு பண்ணினேன்?"

கோபாலகிருஷ்ணன் ஆலமரத்தடியைத் திரும்பிப் பார்த்தான். பையன் சொன்ன பதில் நிற்பவர்களின் ஆதிக்கத்தை உசுப்பி விட்டது. ஒருவன் சலூன் கடைக்கு இரண்டு கடை தள்ளி ஒரு சர்பத் கடைக்கு வந்தான்.

இரண்டு வெண்டை வார்த்தைதன் பயன்படுத்திவிட்டு, "...மவனுங்க எலும்பை எண்ணும வுடறதில்லே... பெட்டாவுங்க எப்படி பஸ் ஏறிடறாங்கன்னு பார்க்கறேன்!" என்று சூளுரைத்தான்.

"அந்தப் பக்கமாவே திரும்பாதே, கதிரு! நாம கவனிக்கறோம்னு தெரிஞ்சா இன்னும் கிளைமாக்ஸுக்குப் போவாங்க" என்று எச்சரித்தான் கோபாலகிருஷ்ணன்.

கதிரேசனுக்கு ரத்தம் கொதித்தது.

"நாம என்ன தப்பு பண்ணினோம்? ஏன் இப்படி பயப்படணும்" என்று மெதுவாய்க் கேட்டான். ஏதோ விளங்கிக்கொள்ள விரும்புவது போல் ஆத்ம திருப்திக்காக.

"நாம தப்பு பண்ண மாட்டோம்னுட்டோம்ல. அதான் நாம பண்ணிய தப்பு! நீ உருப்பட மாட்டே. நீதி நியாயம்னு குட்டிச் சுவராயிட்டே" கோபாலகிருஷ்ணன் வளர்க்கவில்லை. ஆனால் குரல் இடக்கரடக்கலாக இருந்தது:

'உன்னோடு கூட வந்ததுக்கு நானும் அனுபவிக்கப் போகிறேன்' என்று சொல்லாமல் சொல்லிற்று அவன் முகம்.

முப்பத்திரண்டு வருஷம் இந்த பூமியில் ஜனித்து ஒரு பாதையை ஏற்று உழன்று வழியில் வந்த சம்பவ நெரிசல்களில் எல்லாம் வழியைக் கோட்டை விட்டு விடாமல் தப்பித்த அனுபவம் ஒன்றிரண்டு கையிருப்பு மொத்தத்தையும் ஒரு சூதாட்டத்தில் பந்தயம் வைத்த மாதிரி ஒரு திக்பிரமையை உணர்ந்தான் கதிரேசன்.

ஆலமரத்தடியில் தீர்ப்பு காத்திருந்தது. எவ்வளவு நேரம் காத்திருக்கும்? பஸ் வரும் வரை. இவர்கள் பஸ்ஸில் ஏறும் வரை. அதற்கு மேல் காத்திருக்க அவசியமில்லை.

ஊர்... நியாயம்... தர்மம் எதுவும் உதவிக்கு வரப் போவதில்லை.. எல்லாம் கைகட்டிக் கொண்டு வேடிக்கை பார்க்கும்.

கதிரேசனுக்கு முதுகு வியர்த்து பனியன் நனைந்த ஈரம் உறைத்தது.

என்ன அநாதைமை இது? நேர்மையும் நியாயமும் திக்கற்று நிற்கிற என்ன தனிமை இது?

"கதிரு... அத பாரு நம்ம ஆளுங்க அந்த ஹோட்டல்லேருந்து வெளியே வர்றாங்க!"

கதிரேசன் திரும்பிப் பார்த்தான். இங்கிலீக்குப் போவதாகச் சொல்லிப் புறப்பட்ட சக ஆசிரியர்கள் ஹோட்டலை விட்டு இறங்கி வந்தனர்.

மூச்சு முட்டுகிறவனுக்கு ஆக்ஸிஜன் ட்யூப் கூட அத்தனை வரப் பிரசாதமாகத் தென்பட்டிருக்காது. அப்படி ஒரு நிம்மதி கதிரேசனுக்குள் பிறிட்டது.

நாலு பேரும் இவர்களிடம் வந்தார்கள்.

"ஏன் சார்... டவுனுக்குப் போகலே?"

"நாங்க ஸ்கூல் காம்பவுண்டை தாண்டறோம். பஸ்ஸை எடுத்துட்டான்! ரெண்டு மணி பஸ்ல போறு அங்க ஹவுஸ்புல் போர்டைப் பார்த்துட்டு லோலோன்னு வெயில்லே ஓடியாரணும்!"

"நல்லவேளை" என்று பெருமூச்சு விட்டுவிட்டுக் கோபாலகிருஷ்ணன் சுருக்கமாக எதிர் நோக்கியிருக்கும் ஆபத்தை விவரித்தான்.

டிரில் மாஸ்டர் தனராஜ் கொஞ்சம் துடிப்பானவர். நேரே அவர்களிடம் போனார்.

"என்னப்பா சங்கதி?"

ஒருவஸ்தாது அவன் துணிச்சலைக் கண்டு இறங்கிவிட்டான்.

"அட... நம்ப டிரில் மாஸ்டரு... த்தா... அதோ நிக்கிறானே அந்த வாத்யாரு நரசிம்மம் அக்கா மவ பரீட்சை எழுதறான்னு சொல்லியும் கண்டிசனா இருந்துகிறான். நாம யாருன்னு காட்டத்தான் போறோம். நீ ஒதுங்கிக்க தொரை."

"நாங்க இன்னா பண்றது நரசிம்மம்! டிபார்ட்மெண்ட்டு. எங்களைக் கொடைஞ்சிடும். ஒர்த்தரை வுட்டா எழுதற அத்தினி பேருக்கும் ஜவாப் சொல்லணுமில்லே..."

அதற்கு அவன் ஒன்று சொல்ல, இவர் பதில் தர, சாராய போதை சுரம் இறங்கி அவர்கள் பதில் சொல்ல ஐந்தாறு நிமிஷம் ஓடியது.

"ஒம் மூஞ்சியைப் பாத்து வுடறேன் தனம். இல்லேன்னா அவன் டாப்பைக் கயட்டி பஸ் ஏத்தியிருப்பேன்" என்று அந்த நரசிம்மம் சினம் ஆறியது.

"பரீட்சை நடக்கும். பசங்க பாவம் படிக்கலே. இன்னா பண்ணுவாங்க! அட சும்மா பாத்துதான் எய்துவாங்க. டிபார்மெண்டு டிபார்மெண்டுன்னு அலர்றே இன்னா கதை... பசங்க பெய்லாகி பாயாப் பூடுவாங்களே... இதெல்லாம் மாமூல்தானே... இப்ப நீ வந்தே அவனை வுட்டேன். இல்லே 'பெண்டை' நிமித்திதான் அனுப்பிச்சிருப்பேன்."

நரசிம்மம் அடுத்த ரவுண்டுக்கு ஆயத்தம் போட்டான். நல்லவேளை பஸ் வந்துவிட்டது.

மாமூல்!

கதிரேசனுக்கு ரத்தம் மீண்டும் கொதித்தது. அப்புறம் அதில் பயனே இல்லை என்று விவேகம் உதித்தது. பஸ்ஸில் ஏறி உட்கார்ந்த கோபாலகிருஷ்ணன் கதிரேசனை இப்படிக் குட்டிச் சுவராக்கியது எது என்றுதான் யோசித்தான். கதிரேசனுக்கு அன்று அடி விழாமல் தவிர்ந்த விந்தை எப்படியென்று அவன் யோசிக்கவில்லை.

---

அந்த நாள் பிரயாணம்

திருவாடு துறையிலிருந்து குமாரசாமித் தம்பிரான் சில தம்பிரான்களையும் என்னையும் அழைத்துக் கொண்டு ஒரு நாள் (1878ம் ஆண்டு) சிதம்பரத்தை நோக்கிப் புறப்பட்டார்.

ரெயில்வண்டி புதிதாக வந்தகாலமாதலால் அதில் ஏறிச் செல்வது விநோதமாக இருந்தது. அதிகம் கூட்டம் இருக்காது. ரெயில் வண்டியில் பிரயாணம் செய்வதைப் பற்றி ஒவ்வொருவரும் ஒவ்வொரு பாடல் செய்ய வேண்டுமென்று செய்யத் தொடங்கினோம். ஒரே பொருள் பற்றிப் பலவகையான கருத்துக்கள் அமைந்த பாடல்களாதலின் அவை ரசமாக இருந்தன. நான் இரண்டு மூன்று செய்யுட்களை இயற்றிச் சொன்னேன். அவற்றில் ஒரு வெண்பாவின் முற்பகுதி மாத்திரம் இப்போது ஞாபகத்தில் இருக்கிறது.

உண்ணலாம் தூசும் உடுக்கலாம்
நித்திரையும்
பண்ணலாம் நூல்கள் படிக்கலாம்...

(மகா மகோபாத்யாய உ. வே. சாமிநாதய்யரவர்களின் 'என் சரித்திரம்', பக்கம் 642–643)

— மேனு



## 30

### திருமலைக்கு யாத்திரை

பொம்மராஜுபாளையத்தின் ஜமீன்தார் திண்டில் சாய்ந்த வண்ணம் கால்களைத் துவள நீட்டியிருந்தார்.

கண்களில் சிந்தனைகள் மொய்த்தன.

வர்மன் அவரது பரந்த முகத்தைப் பார்த்த வண்ணம் இருந்தான்.

என்ன சொல்லப் போகிறார் அவர்!

பொய் மான் காட்டில் நடந்த விஷயங்களை எல்லாம் வர்மன் அவரிடம் கூறியிருந்தான். அடேயப்பா! தெற்குப் பாளையக்காரர்கள் எல்லோரும் சேர்ந்து பெரிய படையைத் திரட்டிக் காட்டில் தண்டு இறங்கி இருந்தார்கள்.

பரங்கிகளை அவர்கள் நாட்டை விட்டுத் துரத்தப் போகிறார்கள்.

மதுரையில் நாயக்கர் வமிசத்தை மீண்டும் நிறுவப் போகிறார்கள்.

அத்தனையையும் நிகழ்த்த ஆள் பலம் திரண்டு விட்டது. பண பலம்தான் இனி வேண்டியது.

ஜமீன்தார் திருப்பதிப் பணத்தைத் தந்து உதவுவாரா?

ஏன், அவரும்தான் உடன்படிக்கைக் குழுவுக்கு சேக்காளிதானே?

ஜமீன்தாரான கார்வேட் ராஜாவுக்கு உடம்பு வேறு சரியில்லை. சாய்ந்தவாறு இரண்டு முறை புரண்டார். பிறகு எழுந்து உட்கார்ந்தார்.

"வர்மா! இது ஒருநாளில் முடிவு எடுக்கிற காரியமல்ல! தவிர ஒரே ஒரு ஆள் மட்டும் எடுக்கிற முடிவு அல்ல!" என்றார் ராஜா.

"ஏன்! நீங்கள் யாரை இனி கலந்து கொள்ள வேண்டும்?" என்றான் வர்மன்.

"வா! இப்படி!" என்று வர்மனை அழைத்துப் போனார் அவர்.

அரண்மனையின் உட்பகுதிகளை வர்மன் பார்த்ததில்லை. வளைவுகள் அழகாக விரித்து தூண்கள் மீது வந்து தாக்கின.

சுவர்களில் தங்க முலாம் இட்ட பூவேலைகள் சங்கிலிகளாகப் பின்னின.

கம்மென்று ஒருவித நறுமணம் எங்கும் மெல்லிய ரேகைகளாகத் தவழ்ந்தது.

சட்டென்று ஒரு பக்கம் திரும்ப, அது பூஜை அறையாக இருந்தது.

உள்ளே விளக்குகள் தங்கத்திவலைகளாக, எரிய, நட்ட நடுவில் நாயகமாக நின்றவர் திருப்பதி ஸ்ரீ வெங்கடாசலபதி!

"இவரைத்தான் கலந்து கொள்ள வேண்டும் நான்! வேறு யாருமில்லை!" என்றார் கார்வேட் ராஜா!

அவர் சொன்னதின் தொனி அவனைச் சிலிர்க்க வைத்தது.

மரத்தில் செய்யப்பட்டுக் கம்பீர நிலையில் நிற்கும் வேங்கடவனைப் பார்த்தான்.



"எனக்கு வேறு யாருமில்லை! அவர்தான் ஆலோசகர்! வழிசொல்லவேண்டும்! ஏனெனில் பொருள் அவருடையதுதானே!"

வர்மன் பேசவில்லை.

பிரசன்ன முகத்துடன் விளங்கும் ஏழுமலைக் கடவுளைப் பார்த்தான்.

மனத்தில்ஏதோ அழுத்தினாற்போல் இருந்தது. அந்த நிமிடத்திற்கு சுவாசம் தடைப்பட்டது.

"அவரது பொருளை எல்லோரும் கேட்கிறார்கள்! யாருக்குக் கொடுப்பது என்று தெரியவில்லை! வந்தவர்களுக்கு எல்லாம் வாக்குக் கொடுத்து விட்டேன்! இப்போது வகைதெரியாது திண்டாடுகிறேன்! வர்மா! எனக்காக ஒன்று செய்!"

"சொல்லுங்கள், பிரபு!"

கார்வேட் ராஜா சன்னதி வரை சென்று குனிந்து ஒருமஞ்சள் துண்டு முடிச்சை எடுத்தார்.

அதை அவனிடம் கொடுத்து, "எனக்காக ஒன்று செய் வர்மா!" என்றார்.

துணி முடிச்சு கனமாக இருந்தது. உள்ளே நாணயங்கள் பேசுவது கேட்டது.

"எனக்குக் கொஞ்ச நாளாய் உடம்பு சரியில்லை. எனக்குப் பதிலாக நீ நேரே திருமலைக்குப் போ! என் அப்பனின் திருவடிகளில்காணிக்கையை வை! அவரிடமே முறையிடு. 'சுவாமி' தாங்கள் நாள்தோறும் பக்தர்களுக்குத் தரிசனம் தந்து, அவர்களுடைய ஏராளக் காணிக்கையைப் பெற்று வருகிறீர்கள்! இந்தக் காணிக்கை எல்லோரது கண்களையும் இழுக்கிறதே! எல்லோரும் இதற்காகப் போட்டி போடுகிறார்களே! தங்கள் வருமானம் அத்தனையையும் நிர்வாகம் செய்யும்பொறுப்பில்நான் இருக்கிறேன். இந்தப் பொருளை அடியவன் யாரிடம் கொடுக்க வேண்டும்என்றுநியமித்து அருளக்கூடாதா? ஏழுமலை சுவாமி! கண்ணைத்திறந்து வழியைக் காட்டு' என்று என் பிரார்த்தனையைப் பெருமாளின் திருச்செவி சாத்தும்படி முறையிடு செய். பிறகு திரும்பி வா!" என்றார் கார்வேட் ராஜா.

அவர் கண்களில் நீர் துளிர்த்திருந்தது.

பூஜைப் பெருமாளின் முன் சாஷ்டாங்கமாக விழுந்து எழுந்தார்.

"இந்தக் காணிக்கையை ஒரு மாதத்திற்கு முன் செலுத்தியிருக்க வேண்டும். ராஜரீக விஷயங்கள் என்னைக் கவர்ந்து விட்டன. இப்போதும் தேக நிலை சரியில்லை. எனக்குச் சரியான பிரதிநிதி நீதான்! போய் வா!" என்றார்.

பிறகு அவர் அரண்மனை கொலு மண்டபம் வழியாக வரும்போது அங்கே ஓரத்தில் தொங்க விடப்பட்டிருந்த கிளிக் கூண்டிலிருந்து 'செஞ்சுகா' என்று குரல் கேட்டது.

ராஜா பளீர் என்று திரும்பினார். அவர் கண்ணில்கருக் என்று ஒருதிவலை பொட்டிட்டது.

ஆதுரத்துடன் அந்தக் கூண்டை அணுகினார். "பஞ்சவர்ணம்! அழாதே பஞ்சவர்ணம்! செஞ்சுகா சீக்கிரம் வந்துடுவாள்!" என்றார்.

ஒரு பருத்த வயோதிகக் கிளி, பிடிப்புக் கொம்பில் மாறி மாறிக் காலை வைத்துத் தத்தளிப்பைக் காட்டியது.

ராஜா திரும்பும்போது, கண்ணைத்துடைத்துச் "செஞ்சுகா!" என்றார் சோகப் பரவசமாய். "அவள்தான் பெருமாளின் காணிக்கை! அவள்தான் அந்தக் காணிக்கை சொரூபம்! பெருமாளுக்காகவே அவள் பணயமாகப் போயிருக்கிறாள் அல்லவா! வேங்கடமுடையான் அவளை வைத்து விளையாட்டுக் காட்டுகிறான். அவளை அவனே பார்த்துக் கொள்வான்" என்றார்.

பிறகுகுனிந்துகொண்டேநடக்கும்போது, பாதியும் தனக்குள் புலம்பியவாறு, "இல்லாவிட்டால்உன்னைப்போலஒருநல்லமனிதனை அனுப்புவாரா கடவுள்? நீ அவளைப் பின்பற்றிய போயிருக்கிறாயே! அவள் மனத்துக்கு அது எவ்வளவு ஆறுதல் தந்திருக்கும்?" என்று கூறினார்.

வாசல் புறம் வந்ததும், நிமிர்ந்து, "நான் என் மகளுக்காகக் கவலைப்படவில்லை, வர்மா! ஏதோ நீ அவளுக்காகப் புதுச்சேரி வரை போய் செய்தி கொணர்ந்திருக்கிறாய்! அதுவரையில்நல்லது. ஆனால்என் பெண்ணை விடுவிப்பதற்காக, நான் மதாம் தூப்ளேவுக்கு திருப்பதிப் பணத்தைக் கொடுத்து விடப் போவதில்லை! வேங்கடவன் என்ன சங்கல்பிக்கிறானோ, அதையே நான் பின்பற்றப் போகிறேன்" என்றார்.



ஸ்ரீ வேணுகோபாலன்

வர்மன் அவரிடம் விடைபெறும்போது கண்கலங்கி விட்டது.

பொம்மரா ஜுபாளையத்தில் தண்டோரா போட்டு இளவரசி (செஞ்சுகா) சௌக்கியமாகப் புதுச்சேரியில் இருக்கும் நிலை விவரிக்கப்பட்டது. செஞ்சுகா போன இடம் பற்றிய தகவல் கிடைக்காமல் ஜனங்கள் அலைமாந்திருந்தார்கள்.

அவர்களை இந்தச் செய்தி குளிர் விப்பதாக இருந்தது.

நான் பார்த்து நாழி பார்த்து வர்மன் திருமலைக்குப் புறப்பட்டான்.

* * *

நெற்றியில் நாமம் தரித்து ஒரு நல்ல வைணவ பக்தன் போலக் கிளம்பினான் அவன்.

பொம்மரா ஜுபாளையத்திலிருந்து அடிவாரத் திருப்பதியை அடைய மதியம் ஆகி விட்டது.

திருப்பதி நான்கு மாட வீதிகளைச் சமைத்த சிறு ஊராக இருந்தது.

ஆனால் தெருக்களில் எப்போதும் யாத்திரிகர்கள் நடமாட்டம் இருந்தது.

அவர்கள் வசதிக்கு ஏற்ப அததற்கான இனத்தார் தனித் தனிச் சத்திரம் கட்டி வைத்திருந்தார்கள்.

வர்மன் திருப்பதியில் கோயில் கொண்டிருக்கும் கோவிந்த ராஜ பெருமாளை வணங்கி விட்டு, அவருக்கு அர்ச்சனை செய்து பூஜித்து விட்டுக் கிளம்பினான்.

திருப்பதி நகரின் அண்மையிலேயே மலைக் காடுகள் நெருங்கி வந்திருந்தன.

மேற்கு நோக்கி மலையை ஏறிட்டுப் பார்த்தான்.

ஒரு பசுமைச் செழிப்பு மலையில் துளி இடம் விடாமல் மொய்த்திருந்தது.

அந்தப் பிரம்மாண்ட வளர்ச்சிகளைக் கண்டு அவன் அதிசயித்து நின்றான்.

"கோவிந்தா, கோவிந்தா" என்ற குரல்கள் அவனை அடிக்கடி உலுக்கிய வண்ணம் இருந்தன.

அந்த ஆரம்ப வனப் பிரதேசம் வழியே மலையை நோக்கிச் செல்லும் பாதை நெளிந்து ஓடியது.

சற்று சிந்தனைவசப்பட்டவனாய் அதில் நடந்தான் வர்மன்.

"திருமலை தரிசனமா!"

யாருக்கும் எளிதில் கிடைக்காத அபூர்வம் ஆயிற்றே அது!

அவனது தாயார் கேள்விப்பட்டால் எவ்வளவு சந்தோஷப்படுவாள்.

ஊருக்குத் திரும்பும் போது தாயாருக்கு மரப்பாச்சிகள் வாங்கிப் போக வேண்டும்.

முடிந்தால் கற்சட்டிகளும் வாங்கிப் போக வேண்டும்.

யாத்திரிகர்கள் சிறுக சிறுகப் போய்க் கொண்டிருந்தார்கள்.

நாட்டின் பல பாகத்திலிருந்து வருபவர்கள் அவர்கள்.





## இம்பிரிண்ட் வரலாறு

நாம் படிக்கும் ஒவ்வொரு பத்திரிகையின் கடைசி பக்கத்திலும் அந்த இதழின் பதிப்பாளர், ஆசிரியர், அச்சகம் பற்றிய விவரம் அச்சிடப் பட்டிருப்பதைப் பார்க்கிறோம். இதனை 'இம்பிரிண்ட்' என்கின்றனர்.

1799-ஆம் ஆண்டு, 13-ஆம் நாள் முதல் கல்கத்தாவில் 'போர்ட் வில்லியம்' அலுவலகத்தினின்று வெளி வந்த ஆணைக்குப் பின் இந்த முறை நடைமுறையில் இருக்கிறது. இதற்குக் காரணமாயிருந்தவர் 'ஏஷியாடிக்மிரர்' என்னும் இதழின் ஆசிரியரான 'ப்ரூஸ்'. இவர், திப்பு சுல்தானும், வெல்லெஸ்லி பிரபுவும் மைசூரில் போரிட்டு வந்த போது, பிரிட்டிஷ்காரர்கள் அநீதியான முறைகளில் தங்கள் ஆட்சியை விஸ்தரிக்கிறார்கள் என்று கண்டித்து எழுதி விட்டார். இதனைக் கண்ணுற்ற வெல்லெஸ்லி கோபங்கொண்டு "பத்திரிகையாசிரியர்கள் என்ற போர்வையில் தாறுமாறாக



எழுதுபவர்களை அடக்கி வைக்க விரைவில் ஓர் சட்டம் இயற்றப் போகிறேன்" என்று எழுதினார்.

மைசூர்வெற்றிக்குப்பிறகுஅவ்விதமே அச்சட்டத்தைப்பிறப்பித்தார். இதுவே 'இம்பிரிண்ட்' பிறந்த கதை.

—தகவல்: புதுவை நித்திலன்.

உடல் தளர்ந்தும் உள்ளம் தளராமல் நடந்து வந்தார்கள் அவர்கள்.

மலையிலிருந்து இறங்கிய கும்பல்கள் சற்று உற்சாகமாக வருவது தெரிந்தது.

எதிருக்கு எதிர் இரு கோஷ்டிகளும் சந்திக்கும் போது ஒரே 'கோவிந்தா' மயங்கள்!

வர்மன் மௌனமாக இயற்கை வளத்தைப் பார்த்தவாறே நடந்து சென்றான்.

அவன்மனம்பரவசத்தில்ஆழ்ந்திருந்தது.

யாத்திரிகர்களின் நம்பிக்கை அவனைப் பெரிதும் பாதித்திருந்தது.

குடும்பங்கள் கூட, வயோதிகர்கள் உட்பட அந்தமலைக்குச்செல்லும்காட்சி அவனை வெகுவாக கவர்ந்தது.

அடிவாரத்தைநெருங்கநெருங்க ஆனந்த பரவசங்கள் மிகுந்து கொண்டிருந்தன.

திடீரென்று இப்போது தெரியும் கோபுரம் என்ன கோபுரம்? அது என்ன கோயில்?

யோசிப்பதற்குள், "வர்மா!" என்று குரல் கேட்டது.

திரும்பினான்.

குரல் வந்த இடம், ஒரு தோப்பின் பக்கத்திலிருந்து என்று தெரிந்தது.

சுற்று முற்றும் பார்த்தான்.

"வா, இப்படி. இங்கேதான் இருக்கிறேன்."

குரல் இரண்டாம் முறை வந்தது.

சட்டென்று குறிப்பாகத் திரும்ப, அந்த தென் திசைத் தோப்பில், நிழல் அடர்ந்த பகுதியில்யாரோ கிழே சிரமப் பரிகாரமாய், சாய்ந்து படுத்திருப்பது தெரிந்தது.

அவசரமாக போய்ப் பார்க்க, உடனே புரிந்து விட்டது அவனுக்கு.

அது வேன்ஸான் தான்!

வர்மன் வருவதைப் பார்த்து முழுப் புன்னகை முகத்துடன் அவனை நோக்கியிருந்தார்.

வர்மனுக்குக் கண்களை நம்ப முடியவில்லை.

சில நாட்களுக்கு முன்னதாகத்தானே அவரைப்பொய்மான் காட்டில், பாலையக்காரர் கண்டு இறங்கிய இடத்தில்பார்த்தது!

அதற்குள் இங்கே எப்படி வந்தார்?

முடிகிற காரியமா அது!

சற்றுத் திரும்பிப் பார்த்ததில் அவனுக்கு அவர் வந்த விதம் புலனாயிற்று.

மாமரத்தின் நிழலோரத்தில் இரண்டு குதிரைகள் நின்று கொண்டிருந்தன.

இரண்டையும் மாறி மாறி உபயோகித்து அவசர அவசரமாக திருப்பதி வந்திருக்கிறார் அவர்.

"தாங்களா? பிரபு! தாங்கள் ஏன் இங்கே வந்தீர்கள்?" என்றான் வர்மன்.

"உட்கார் வர்மா!" என்றார் அவர்.

உட்கார்ந்தான்.

"அதிசயப்படாதே வர்மா! நானும் திருமலைக்கு வரப் போகிறேன்"

திடுக்கிட்டான் அவன்.

"நீங்களா?"

"ஆமாம்."

"நீங்கள் எதற்கு?"

"உடன்படிக்கைக் குழு என்னிடம் ஒரு வேண்டுகோள் விடுத்திருக்கிறது."

"என்ன வேண்டுகோள்?"

வேன்ஸான் சாவமானமாக எழுந்து உட்கார்ந்து வர்மனைத்தீர்க்கமாகப் பார்த்தார்.

(தொடரும்)

## சாவிக்குப் பதில் பூட்டு

புது ஊர். புதுக் குடித்தனம். பத்தடி தூரத்திலிருந்த ஹோட்டலுக்குப் போக வீட்டைப் பூட்டிக் கொண்டு கிளம்ப வேண்டியவன், ஞாபக மறதியாகப் பூட்டைப் பையில் போட்டுக் கொண்டு, போய் விட்டேன். திரும்பி வந்து பார்த்தால் வீடு திறந்திருக்கிறது. நகை புடவை துணிமணி எல்லாம் பாக் செய்த பெட்டியில் இருக்க, திருடன் சௌகர்யமாகத் தூக்கிச் சென்றுவிட்டான்.

கே. ஆர். கோபாலன், ஓஸார் நாசிக்.

## நூலில் தொங்கும் சீப்பு

சீப்பு எங்கே என்று தேடி தலையைப் பிய்த்துக் கொள்ளும் சங்கடத்திலிருந்து மீள ஒரு வழி. சீப்பை நூலில் கட்டி நிலைக் கண்ணாடி மாட்டிய ஆணியில் தொங்க விட்டு விட்டேன். பெண்டுலம் மாதிரி சீப்பு ஆடுவது சட்டென்று கண்ணுக்குப் படத் தொல்லை மிச்சம்.

என். சுந்தரேசன், தஞ்சாவூர்—1.

## மறந்த கடிதம்

ஒரு சிநேகிதி அவசரமாக என்னிடம் ஒரு கடிதத்தைக் கொடுத்து போஸ்ட் செய்யச் சொன்னாள். ஒரு வார விடுமுறையில் தபாலை மறந்து ஊருக்குப் போய் விட்டேன். திரும்பி வந்த என்னை அவளுடைய தற்கொலைச் செய்தி வரவேற்றது. பதறிப் போய் அவள் கொடுத்த கடிதத்தைப் பிரித்துப் படித்தேன். கணவன் கொடுமை தாளாமல் உடனே அழைத்துச் செல்ல வருமாறு பெற்றோருக்கு எழுதியிருந்தாள். தபாலில் சேர்க்கத் தவறிய அந்தக் கடிதம் மறக்க முடியாத மனப்பளுவாயிற்று.

எஸ். கே. வள்ளி, மேட்டூர்.

## மறப்பேனா துப்பாக்கியை?

சப் இன்ஸ்பெக்டர் பயிற்சிக் காலத்தில் துப்பாக்கியை மறந்து 'பெரேடு'க்குப் போய் விட்டேன். பார்த்தால் எல்லோரும் துப்பாக்கியோடு நிற்கிறார்கள். பெரேடுக்குப்







போகாது நின்ற என்னை சுபேதார் விசாரித்தார். ஜுரம் என்று சமாளித்தேன். போலீஸ் ஆஸ்பத்திரிக்கு அனுப்பி விட்டார். மிகவும் கண்டிப்பான டாக்டர் என்னைப் பரிசோதித்து ஒன்றுமில்லை என்று திருப்பி விட, மூன்று நாட்கள் வெயிலில் எக்ஸ்ட்ரா 'பெரேட்' பொய் சொன்னதற்காக. அப்புறம் மறப்பேனா துப்பாக்கியை?

துபாஷ் அப்துல் ரசாக், எண்ணூர்.

## விபத்து தவிர்ந்தது

மறுநாள் எண்ணெய் ஸ்நானம் செய்ய இரவு 10 மணிக்கே ஹீட்டரில் நீர் நிரப்பி வைத்தேன். ஞாபக மறதியாக ஸ்விட்சைப் போட்டு விட்டேன். இரவு 2 மணிக்கு பாத்



ரூமுக்குச் சென்ற என் தந்தை ஹீட்டர் சிறுசிறுதளதளவென்று வெந்நீர் கொதிப்பதைக் கண்டு ஸ்விட்சை அணைத்து விட்டார். நல்லவேளை ஒரு விபத்து தவிர்ந்தது.

ஆர். லக்ஷ்மி, திருச்சி—17.

### திரையும் நினைவும்

பைலட் பிரேம்நாத்தில் சிவாஜி டார்ச் லைட்டுடன் வருகிற காட்சியைப் பார்க்கும் போதுதான் நான் கையோடு கொண்டு வந்த டார்ச்சை சைக்கிள் காரியரில் மறந்து வைத்து விட்டு தியேட்டருக்குள் நுழைந்த ஞாபகம் வந்தது. எடுத்து வர எழுந்தேன். நண்பர்கள் சினிமா முடிவதற்குள் கிளம்பு





வதாக எண்ணி கையைப் பிடித்து உட்கார வைத்தனர். நண்பர்களிடம் விஷயத்தை விளக்கியதும் குபீரென்று சிரித்தனர்.

பி. சேதுராமலிங்கம், பாட்னா—1.

### எந்த கார்டு

பால் கார்டையும் தபால் கார்டையும் ஒன்றாக எடுத்துக்கொண்டு வெளியே கிளம்பினேன். தபால் கார்டை அஞ்சலில் சேர்ப்பதற்கு மாறாகப் பால் கார்டைப் போட்டு விட்டு தபால் கார்டை 'மில்க் பூத்'தில் நீட்டினேன். சிரித்து விட்டார் 'பூத்' காரர். விஷயம் புரிந்து தபாலாபீஸுக்கு வந்து போஸ்ட் மாஸ்டரிடம் கெஞ்சி பால் கார்டை மீட்டேன்.

ஆர். வி. முரளி கிருஷ்ணா, சென்னை—106

### தூது சென்ற தங்கை

என் அண்ணா அண்ணியைக் காதலிக்கிற நேரம் அது. தூதுக்கு நான். அண்ணி கொடுத்த கடிதத்தை அண்ணாவிடம் சேர்ப்பிக்க மறந்து புத்தகத்தில் வைத்து விட்டேன். யதேச்சையாகப் புத்தகத்தைப் புரட்டிய அப்பா அது யாருக்கோ நான் எழுதி வைத்த கடிதமென குதியோ குதி என்று குதித்தார். பிறகு என் விளக்கம் அண்ணா, அண்ணி திருமணத்திற்கு மிகவும் உதவிற்று.

குமாரி மஞ்சரி, சென்னை—78.

### பிம்பமே உன் விலை என்ன?

துணிகளை 'அயர்ன்' செய்ய இஸ்திரிப் பெட்டியின் ஸ்விட்சை ஆன் செய்தாள் என் சிநேகிதி. அது சூடேறுவதற்குள் பால் காய்ச்சி விடலாம் என்று சமையல் அறைக்குப் போனவள் இஸ்திரிப் பெட்டியை மறந்தே போனாள். அருகில் வந்த குழந்தை அதில் முகம் தெரியவே கண்ணாடியில் மூக்கை வைப்பது போல் வைத்து மூக்கைச் சுட்டுக் கொண்டு வீறிட்டது. செய்தி கேட்ட அன்று எனக்கு வேலையே ஓடவில்லை. அன்றிலிருந்து ஒரே சமயம் இரண்டு வேலை செய்வதில்லை என்று தீர்மானித்தேன்.

திருமதி சாவித்திரி மணி, ஸாக்சி,
ஜம்ஷெட்பூர்.

### 'டிரிம்மர்' ஜாக்கிரதை

'ஹேர் டிரிம்மரில்' (Hair trimmer) உள்ள பிளேடை எடுக்காமல் ஞாபக மறதியாக மேஜை மேல் வைத்துச் சென்று விட்டேன்.

**வாசகர் பங்கு**

என் மகன் அதைச் சிப்பு என்று எண்ணி அழுத்தி அழுத்தி வாரியிருக்கிறான். பின்னந் தலையில் முக்கால் பாகம் மழிக்கப்பட்டு விட்டது. அவன் வருந்த, நான் என் தவற்றை உணர்ந்தேன்.

பி. அனந்தநாராயணன், சிறுமுகை.

## குப்பைக்குப் போன குறிப்பு

விமானப் படையில் பணிபுரியும் நான் போர் விமானம் ஒன்றில் புதிய மின்னணுக் கருவியைப் பொருத்தும் வேலையில் ஈடுபட்டிருந்தேன். பொருத்தியானதும் தரையில் இருந்த கருவியில் 'ரீடிங்' எடுத்தேன். அக் குறிப்புக்களைப் படத்தில் வரைய டிராயிங் ஆபீசுக்குச் சென்றேன். அறையைச் சுத்தம் செய்ய 'ஸ்வீப்பர்' வர குறிப்பை மறந்து வெளியே போனேன். திரும்பி வந்து தேடு தேடென்று தேடியும் அக் குறிப்பைக் காணோம். அதையும் கூட்டித் தள்ளி விட்டிருந்தான் ஸ்வீப்பர். பொதுக் குப்பைத் தொட்டிக்கு ஓடி குப்பையை மூக்கைப் பிடித்துக்கொண்டு கிளறி கடைசியில் கண்டு பிடித்தேன்.

எஸ். சோமசுந்தரம், ஹைதராபாத்.

## விடுநரும் பெறுநரும்

மணியார்டர் அனுப்பப் போனேன். பெறுநர் பகுதியில் கை மறதியாக என் முகவரி எழுதிவிட்டேன். பதிவு செய்கிறவர் 'ஏன் தம்பி, உள்ளூர் தானே, நேரிலேயே கொடுத்திருக்கலாமே. மணியார்டர் கமிஷன் வீண் செலவு ஏன்?' என்று கேட்டபோது தான் என் தவறு புரிந்தது. அன்றிலிருந்து மறதியைப் போக்க நான் கடைப்பிடிப்பது பொறுமை.

ஆர். சிவசுப்பிரமணியன்,
நாகப்பட்டினம்.

## எச்சரிக்கை... எச்சரிக்கை

நான் பணியாற்றும் தொழிற்சாலையில் உள்ள குளிர்சாதனக் குழாய்களைச் சுத்தம் செய்யுமுன் ''மெயினை'' ஆஃப் செய்து 'வேலை நடக்கிறது. மெயினைப் போடாதே' என்று எச்சரிக்கை அறிக்கை மாட்டுவார்கள். ஒரு நாள் எச்சரிக்கை அட்டையை மாட்ட மறந்து, குழாயினுள் சுத்தம் செய்யப் போய் விட்டார் ஒருதொழிலாளி. மற்றொரு தொழிலாளி மெயினைப் போட உள்ளே போனவர் விபத்துக்குள்ளாகி ஒரு கையை இழந்து விட்டார்.

ஏ. ஜி. குருசாமி, மதுரை—10

## தவறி விட்ட தலை திவசம்

என் அண்ணா ஒரு தேதியை என்னிடம் கொடுத்து இந்த தேதியில் தன் நண்பனின் தந்தை காலமாய் விட்டார், தலை திவசம் என்றைக்கு வருகிறது என்று ஒரு ஜோசியரைக் கேட்டு வரச் சொன்னார். நான் மறந்து போனேன். ஞாபகம் வந்து மறு நாள் ஜோசியரை அணுகினேன். 'இன்றைக்குத்தான் தலை திவசம்' என்றார். என்னிடம் கொடுத்த முக்கியப் பொறுப்பை மறந்த வேதனை என் நெஞ்சை அறுத்தது.

டி. பாரதி, சென்னை—53.

## கல்லும் பல்லும்

என் மாமாவும் அவர் பையனும் ஐயப்ப ஸ்வாமி கோயிலுக்குப் போக மாலை போட்டிருந்தனர். என் வீட்டிற்கு விருந்தினராக அவர்கள் வந்த போது ஆசாரமாகச் சமைக்கிற சிரத்தையில் அரிசியில் கல் பொறுக்க மறந்து போனேன். விளைவு? ஒவ்வொரு வாய் சாதத்திற்கும் கல் சத்தம் போட்டது. எனக்கோ உடம்பு கூசிவிட்டது. ஆனால் மாமா கல்லும் முள்ளும் காலுக்கு மெத்தை, பல்லுக்கு உறுதி என்று புன்னகையோடு சொல்லிக் கொண்டே பெருந்தன்மையாகச் சாப்பிட்டார்.

டி. ஆர். சுசீலா, திருச்சி—8.

## தேதி மறந்த திருமணம்

நண்பர் ஒரு திருமண அழைப்பிதழ் கொடுத்தார். தை மாதத்தில் ஒரு ஞாயிற்றுக் கிழமை. அழைப்பிதழ் கை தவறி விட தேதி மறந்து அதற்கு முந்திய ஞாயிறு அன்று கல்யாண மண்டபத்துக்கு ஒரு பரிசுப் பொருளுடன் போனேன். அப்புறம் தான் தெரிந்தது நடப்பது வேறு திருமணம் என்று. அசடு வழிய கையிலிருந்த பரிசுப் பொருளை முகம் தெரியாத மாப்பிள்ளைக்குப் பரிசளித்து விட்டு வந்தேன்.

ஆர். நந்தகோபால், திருச்சி—20.

**ராகமாலிகா வழங்கும் பட்டுப்புடவையை குலுக்கல் முறையில் பரிசாகப் பெறும் அதிர்ஷ்டசாலி:**
**துபாஷ் அப்துல் ரசாக்,**
**11, திருமூர்த்தி நகர்,**
**எண்ணூர், சென்னை—57.**

அவன்: இந்த சாதாரண 'ஜோக்கைப் படிச்சிட்டு இப்படிக் குலுங்கிக் குலுங்கி சிரிக்கிறீங்களே, ஏன் சார்?
அவர்: என் தலையெழுத்து! இது என் மனைவி எழுதிய ஜோக்காச்சே!
—கடலூர் கன்னியப்பன்.



# சிறிதே சாதுர்யம் தேவை, கேசம் பெறுகிறது இளமை!





வாழ்க்கையின் குறிப்பிட்ட ஒரு நேரத்தில் கேசம் நரைக்கத் துவங்குகிறது. இளமை அத்துடன் முடிவடைந்துவிட்டதாக நீங்களும் எண்ணி விடுகிறீர்கள். அது வெறும் பிரமைதான். சிறிதே சாதுர்யமாக செயல்பட்டால் இத்தகைய தவறான பிரமை விலகிவிடும்.

**கேள்வி: கேசத்திற்கு ஹேர் டை எப்போது உபயோகிக்கத் துவங்கலாம்?**

பதில் : கேசம் நரைப்பதற்கு குறிப்பிட்ட வயது என்று எதுவும் கிடையாது. அதனால், நரைக்கும் அறிகுறி தோன்றியதுமே கேசத்துக்கு ஹேர் டை உபயோகிக்கலாம்.

**கேள்வி: ஆனால் ஹேர் டை செய்வது என்பது பெரும் தொல்லையும், மிகுந்த நேரம் தேவைப்படும் விஷயமும் அன்றோ?**

பதில் : நீங்கள் கண்டகண்ட ஹேர் டைகளை வாங்கி உபயோகித்தால் அப்படி நேரக்கூடும். ஆனால் கோத்ரெஜ் ஹேர் டை உபயோகிப்பது மிகவும் எளிது. காரணம் இது தானாகவே பரவி விடுகிறது.

**கேள்வி: அடிக்கடி ஹேர் டை உபயோகித்தால் கேசத்திற்குக் கெடுதல் ஏற்படக்கூடுமா?**

பதில் : உயர்தரமான ஹேர் டையாக இருந்தால் சிறிதும் கெடுதல் இல்லை. அதாவது, கோத்ரெஜ் ஹேர்டை கேசத்துக்குக் கருமை கூட்டுவது மட்டுமல்லாது, அதை அழகுறச் செய்து பளபளப்பும் அளிக்கிறது.

**கேள்வி: கோத்ரெஜ் ஹேர் டையினால் துணிகள், தலையணைகள் இவற்றில் கறைகள் ஏற்படுகின்றனவா?**

பதில் : கோத்ரெஜ் ஹேர் டையினால் அப்படி ஏற்படாது. காரணம்; அது மற்ற ஹேர் டைகளைப்போல் கேசத்தின் மேற்பகுதியில் தங்கி விடாமல் கீழ்ப்பகுதிவரை ஊடுருவிச் செயல்புரிகிறது.




**கேள்வி: கோத்ரெஜ் ஹேர் டை எவ்வளவு நாட்களுக்கு செயல் திறனை நீடித்து வைக்கின்றது?**

பதில் : குறைந்த பட்சம் மூன்று-நான்கு வாரங்களுக்கு.

**கேள்வி: கோத்ரெஜ் ஹேர் டையின் மூலம் கேசத்தை டை செய்தபின் வழக்கம்போல் தலையை அலசிக்கொள்ள முடியுமல்லவா?**

பதில் : ஆம். கேசத்தை நல்ல ஷாம்பூ போட்டு அலசவும். பிறகு அதன்மீது ஹேர் ஆயில் அல்லது க்ரீம் போட்டுக் கொள்ளலாம்.

**கேள்வி: ஹேர் டையினால் ஒருவித துர்நாற்றம் வீசுகிறது என்கிறார்களே?**

பதில் : வேறு ஹேர் டைகளைப் பொறுத்தவரை இவ்விதமாக இருக்கக்கூடும். ஆனால் கோத்ரெஜ் ஹேர் டையில் நல்ல நறுமணம் உண்டு. தவிர இதில் கண்டிஷனரும் உள்ளது.

**கேள்வி: கோத்ரெஜ் ஹேர் டை பற்றி வேறு ஏதேனும் கூற முடியுமா?**

பதில் : கோத்ரெஜ் லிக்விட் ஹேர் டை 20 மிலி மற்றும் 40 மிலி. பாட்டில்களில் கிடைக்கிறது. இரண்டு ஷேடுகளில். டார்க் ப்ரௌன் மற்றும் நேச்சரல் ப்ளாக். உங்கள் கேசத்தின் இயற்கையான வண்ணத்துக்கேற்றதைத் தேர்ந்தெடுங்கள்.

**Godrej**

**கோத்ரெஜ் பர்மனெண்ட் லிக்விட் ஹேர்டை**

**தெரிந்தவர்களுக்கு மட்டுமல்ல உபயோகிக்க விரும்பும் புதியவர்களுக்கும்**

கோத்ரெஜ் தயாரிப்பு.

CLARION/B/GS/22/203 TML

# 18

அரவிந்தன் கடந்த சில நாட்களாக உறக்கம் வராமல் தவித்தான். எப்போதுமே படுத்தவுடன் தூக்கம் வந்துவிடும். கண்விழிக்கும் போது காலை ஐந்தரை மணி என்று கடிகாரம் காட்டும். இந்த ஒரு வாரமாக நடுநிசி வரையில் அவன் புரண்டு புரண்டு படுக்கிறான். புத்தகம் படித்தால் ஒருவேளை கண் சீக்கிரமாகச் செருகக் கூடும் என்று அந்த முயற்சியில் ஈடுபட்டான். மனமும் புத்தகங்களில் ஈடுபடவில்லை.

என்ன காரணம்? மேலெழுந்தவாரியாக நினைத்துப் பார்த்த போது ஏதும் விளங்கவில்லை. காரியாலயத்தில் அவன் கேட்டிருந்த மூன்று மாத லீவைக் கொடுத்துவிட்டார்கள். தாரக்ராம் எந்த விதத்திலும் இது வரையில் ஒரு தொந்தரவும் அளிக்கவில்லை. தூக்க மருந்து இல்லாமலே மாயா நாட்களைத் தள்ளுகிறாள். அவளுக்குத் திடீர் திடீரென்று கோபம் வருகிறது. அவன் மௌனமாக நிற்கும் போது கையில் கிடைத்ததை — அது புத்தகமோ, டம்ளரோ, — ஒருதடவை செருப்பும் கூட — அவன் மீது தூக்கி எறிகிறாள். அவனுடைய மௌனம் தொடர, எதிர்ப்பே இல்லாமற் போக, மாயா விரைவிலேயே அடங்கிவிடுகிறாள். சிலசமயங்களில் காரணகாரியம் இல்லாமல் அவனைக் கட்டிக் கொண்டு, அவனுடைய மார்பில் முகத்தைப் புதைத்து அழுகிறாள். அவன் அவளுடைய முதுகை லேசாகத் தடவிக் கொடுத்தும், முகத்தை நிமிர்த்தி, கண்ணீரை விரல்களால் சுண்டிவிட்டும் சமாதானப்படுத்த, அவளுடைய அழுகை ஓய்கிறது. ஒருநாள், நாள் முழுதும் சாப்பிடாமல் இருந்த இடத்திலேயே ஆணி அடித்தாற்போல் அவள் உட்கார அவனும் அவள் எதிரே உட்கார்ந்து பட்டினி கிடந்தான். மாலை ஆறு மணிக்கு காலையிலேயே மேஜைமீது வைத்திருந்த உணவை மாயா தானாகவே பரிமாறிக் கொண்டாள். மாயா நிச்சயமாக அவனுடைய உறக்கத்தைப் பாதிக்கவில்லை.

கடைசியில் தூக்கமில்லாததற்குக் காரணம் சட்டென்று புரிந்தது.

வசுமதி.

வசுமதியின் போக்கு அவனையும் அறியாமல் அவனை மெல்ல மெல்லப் பாதித்திருக்கிறது.

அவனுடைய திருமணத்துக்குப் பிறகு வசுமதியிடம் ஒரு மாற்றம் ஏற்பட்டிருக்கிறது. நாள் செல்லச் செல்ல அவளுடைய செய்கைகளில் இயல்பான, இயற்கையான ஆர்வம் இல்லை. ஒரு செயற்கைத்தனம் இருப்பதாகப் பட்டது. 'உதவி செய்கிறேன்' என்று வாக்கு அளித்ததை நிறைவேற்றுவதற்காக அவள் தினசரி வருவதாகப் பட்டது.

ஒரு நாள் நடந்த சம்பவம் திடீரென்று நெஞ்சில் முட்டியது.

ஞாயிற்றுக்கிழமை.

பிற்பகல் நான்கு மணி.

மாயாவின் அறையில் வசுமதி இருக்க, அரவிந்தன் ஹாலில் டீ.வி. பார்த்துக்கொண்டிருந்தான்.

மாயாவும் வசுமதியும் பேசிக் கொண்டிருந்தார்கள். டீ.வி.யின் இரைச்சலில் சரியாகக் காதில் விழவில்லை.

டீவி. குரல் இழந்தது.

"அந்துவை உனக்கு ரொம்ப நாளாத் தெரியுமா, வசுமதி?" அபூர்வமாக எல்லோரையும் போன்ற 'நார்மல்' நிலையில் மாயா அன்று இருந்தாள்.

"ரெண்டு வருஷமா."

"நன்னாப் பழகினீங்களா?"

"ஒ யெஸ்."

"எப்படி?"

"நீ எப்படின்னு உன் மனசிலே நினைக்கிறே?"

"லவர்ஸா?"

"கரெக்ட்..."

"ஏன் அப்ப கல்யாணம் பண்ணிக்கல்லே?"

"அவர் உன்னைக் கல்யாணம் பண்ணிக்க ஆசைப்பட்டார்."

"ஏன்?"

"தெரியாது."

"அந்து நல்லவன். யாரையும் ஏமாத்த மாட்டான்... ஒருநாள் கூட என் கிட்டே கோவிச்சுக்கிட்டதில்லே... ராஜம்மா கூடச் சொன்னா, 'மாயா உனக்கு ஒரு நல்ல புள்ளை புருஷனா வாய்ச்சிருக்கான்'னு. உன்னை உண்மையா அவன் லவ் பண்ணியிருந்தா நிச்சயமா என்னைக் கல்யாணம் பண்ணிக்க பாம்பே வந்திருக்க மாட்டான்."

"ஆண்களை நம்பக் கூடாது, மாயா."

"பெண்களை, யாரா இருந்தாலும் நம்பிடலாம்னு அர்த்தமா?" என்ற மாயா, "இப்ப நான் உன்னையே நம்ப மாட்டேன். எனக்குத் தோணறது, நீதான் அவனைக் கைவிட்டிருப்பேன்னு..." என்றாள்.

"நான் ஏன் நான் காதலிச்சவரைக் கைவிடணும்?"

"யாருக்குத் தெரியும்? நானே அந்துவைக் கேக்கறேன்!"

"நோ... நோ... ப்ளீஸ்... மாயா... மாயா ப்ளீஸ்... நாம ரெண்டு பேர் பேசினது எதுவும் அரவிந்த்கிட்டே சொல்லாதே!"

"நீ பயப்படறே! ஏன் பயப்படணும்? நான் சொல்றேன்... நீ பொய் சொல்றே..!"

"சத்தியமா நான் பொய் சொல்லலே.."

என்ற வசுமதி, "மாயா நீ சீக்கிரம் டிரஸ்பண்

ணிக்க... நாம மூணு பேரும் பீச்சுக்குப் போறோம்,'' என்றாள்.

''யார் சொன்னு?''

''ஏன், நான் சொல்றேன்.''

''நீ யார் சொல்ல? என்னை பீச்சுக்கு அழைச்சுண்டு போகணும்னு அந்து சொல்லட்டும். அப்பவும், நீ கூட வர்றதானு நான் இல்லே. இப்ப உன்னை எனக்குப் பிடிக்கலே.. நீ போ...''

திடீரென்று மாயாவிடம் தோன்றிய மாற்றத்தை உணர்ந்தான், பேச்சை முழுதும் கேட்டுக்கொண்டிருந்த அரவிந்தன். அவளுடைய மாற்றத்தின் காரணமும் புரிந்தது. எல்லாவற்றிற்கும் மேலாக வசுமதி மீது கோபம் வந்தது. ஏன் கள்ளம் கபடு இல்லாத ஒரு பெண்ணின் மனத்தை அவள் குளவி கொட்டுவது போலக் கொட்ட நினைக்கிறாள்.

சிறிது நேரத்துக்குப் பிறகு வசுமதி சமையலறையில் இருந்தபோது, அரவிந்தன் மாயாவின் அறைக்குச் சென்றான்.

அவள் கட்டிலில், இரு முழங்கால்களையும் கைகளால் அணைத்து உட்கார்ந்து, கண்ணீர் மல்கிக் கொண்டிருந்தாள்.

அவன் அவள் எதிரே உட்கார்ந்தான்.

''அவ... அவ... என்ன சொல்று தெரியுமா, அந்து?''

''அவ இப்பப் போயிடுவா. அப்புறம் பேசலாம் மாயா!''

''அவ வரவேண்டாம்.''

''சரி, சொல்லிடறேன்!''

''நான் உன்னை நம்பறேன், அந்து.''

வசுமதி ஒரு ட்ரேயில் போர்ன்விட்டாவும் நாலைந்து பிஸ்கட்டுகளுமாக எடுத்து வந்தாள்.

''மாயா, இந்தா.''

மாயா தம்ளரை எடுத்தாள்.

அடுத்தகணம் அது வசு மீது பறந்தது. தம்ளரின் விளிம்பு தாடையில் இடிக்க, ரத்தம் தெரிந்தது.

''போ... போ... போ...''

எரிக்கும் கண்களால் மாயாவைப் பார்த்த வசுமதி, ''இது தேற முடியாத கேஸ்!'' என்று முணுமுணுத்தாள். தாடையைத் தொட்டுப் பார்த்தவளாய் வசுமதி வெளியேறினாள்.

''நான் வேறே போர்ன்விட்டா கலந்து தர்றேன் மாயா!''

''அவ மொதல்லே போகட்டும்.''

''சரி, அனுப்பிச்சுட்டு வரேன்.''

''அந்து!''

''என்ன மாயா?''

''நீ நல்லவன்.''

''தாங்க் யூ!''

''நீ யாரையும் ஏமாத்த மாட்டே...''

''தாங்க் யூ மாயா.''

''உன்னாலே யாருக்கும் துரோகம் செய்ய முடியாது!''

அரவிந்தன் சிரித்தான்.

அவளும் சிரித்தாள்.

ஹாலில் சோபாவில் வசுமதி உட்கார்ந்திருந்தாள்.

''ஐ'ம் ஸாரி, வசு... ரொம்ப வலிக்கிறதா?''

''இட் இஸ் ஆல் ரைட்.''

''ஆனா நீ என்னைப் பத்தி அவகிட்டே அப்படிப் பேசியிருக்கப் படாது...''

''எப்படிப் பேசினேன்!''

''அவ இன்னிக்குகார்த்தாலேந்துரொம்ப நார்மலா இருந்தா... நீ அதைக் கெடுத்துட்டே!''

''என்ன உளர்றீங்க, அர்விந்த்?''

''நீங்க ரெண்டு பேர் பேசிண்டிருந்ததெல்லாம் என் காதில விழுந்தது. என்னைப் பத்திப் பொய்மையான தோற்றத்தை மாயா மனசிலே பதிய ஏன் ட்ரை பண்ணினே?''

''நான் ஒரு பெண், அர்விந்த். உங்களை விட்டுக் கொடுக்கறப்ப இருந்த தன்னலமற்ற எண்ணம் என்னை விட்டுப் போயிண்டே இருக்கு...''

''வசு...''

''நீங்கதான் எனக்கு வேணும், அர்விந்த்.. ஐ ஆம் எ வுமன்... எ வுமன் ஹூ லவ்ஸ் யு! யெஸ், ஐ ஸ்டில் லவ் யு.''

''டோண்ட் பீ ஸில்லி. ஐ'ம் மேரிட். இனிமே நீ இங்கே உதவி செய்ய வர வேண்டாம், வசு.''

''நோ... நோ... ப்ளீஸ்... நான் மன்னிப்புக் கேட்டுடறேன்... நான் இங்கே வரக் கூடாதுன்னு மட்டும் சொல்லிடாதீங்க...''

''அப்ப அவகிட்டே சரியா நடந்துகொள்.''

''ஓ.கே.''

''போய் என்கிட்டே கேட்கிற மன்



''எங்கப்பா எழுதின ஆபீஸ் பரீட்சை ரிஸல்ட்டும் என் ரிஸல்ட்டும் ஒரே நாளில் வர்றதினாலே சௌகரியம்''

''எப்படி?''

''எங்கப்பா ஃபெயிலானால் நான் ஃபெயிலானால் கண்டுக்க மாட்டார். எங்கப்பா பாஸ் ஆகி நான் ஃபெயிலானாலும் கண்டுக்க மாட்டார், தான் பாஸான சந்தோஷத்தினால்!''

— வி. பி. கிருஷ்ணசாமி.

னிப்பை அவகிட்டே கேளு.''

''அவ ஒரு மென்ட்டல் கேஸ். அவளாலே புரிஞ்சுக்க முடியாது...''

''ஷட் அப்... என் பெண்டாட்டி ஒரு மென்ட்டல் கேஸ்னு எனக்கே தெரியும். நீ குத்திக் காட்ட வேண்டாம்... அவ மென்ட்டல் கேஸ்னு தெரிஞ்சும் ஏன் அவ நெஞ்சிலே விஷத்தை இறக்கப் பார்த்தே?''

''அப்ப நார்மலா இருந்தா. ஆனா நான் பாய்ஸன் பண்ணலே..''

''வசு, நீ ரொம்ப மாறிட்டே.''

''நீங்க மாத்திட்டீங்க!''

''என்னை அவளுக்காக விட்டுக்கொடுத்த நீ முன்னமேயே ஒதுங்கி இருக்கணும் வசு... ஆனா நீ அதைச் செய்யலே... மொதல்லே உன்னை ஒரு நல்ல பொண்ணுன்னு மாயா சொன்னா. இப்ப அதே மாயா உன்னை வெளியே போங்கறா.''

''நீங்க போகச் சொல்லாதீங்க, அர்விந்த்.. வீட்லே நிம்மதி இல்லே... ஆபீஸ் போனா அங்கே கவனம் செல்ல மாட்டேங்கறது... எனக்கு என்ன செய்யறதுன்னே புரியலே... ஒருநாள் நீங்க எனக்கு நிச்சயம் கிடைப்பீங்கன்னு நான் நம்பிக் காலத்தைத் தள்றேன்.''

''ப்யூர் அண்ட் ஸிம்பிள் இடியஸி... வசு, இப்ப நீ வீட்டுக்குப் போய் நாளைக்கு மார்னிங் வா... நான் மாயாவைச் சமாதானப் படுத்தறேன்.''

வசுமதி ஒரிரு நிமிடங்கள் இருந்துவிட்டு வெளியேறினாள்.

அவன் மீண்டும் மாயாவின் அறைக்குள் பிரவேசித்தபோது அவள் தூங்கிக் கொண்டிருந்தாள்.

* * * * *

இந்த நிகழ்ச்சிதான் தன் உறக்கமின்மைக்கும் தூக்கத் தடங்கல்களுக்கும் காரணம் என்று அரவிந்தனுக்குப் புரிந்தது. இதை ஏன் முன்னமேயே அவன் உணரவில்லை? இந்த நிகழ்ச்சியை அடியோடு மறக்கும் வண்ணம் வசுமதி, மறுநாளிலிருந்து நடந்து கொண்டதாலா? மாயாவுக்கு அவள் பன்மடங்கு அதிகமாக சிசுருஷை செய்யத் தொடங்கியதாலா? அல்லது மீண்டும் ஒரு தடவை மாயா சாதாரண நிலையில் இருக்கும்போது அவளிடம் மன்னிப்புக் கேட்டதாலா?

கண்களை மூடிப் படுத்திருந்த அவன் திடீரென்று காலடிச் சத்தத்தை உணர்ந்தான்.

இருட்டில் கண்களை அகலத் திறந்து பார்த்தான்.

மாயா!

ஒரிரு நிமிடங்களில் அவள் நாடி வந்தது கிடைத்துவிட்டதை அறிகிறான். ஒரு புத்தகம்.

மாயா புத்தகத்துடன் தன் அறைக்குத் திரும்புகிறாள். பெரிய விளக்கு எரிகிறது.

மாயா குணமடைந்து வருகிறாள் என்பதற்கு இது ஒரு அறிகுறியா?

* * * * *



நண்பர்: ''என் தாத்தா பெயர் ராமலிங்கம். அதையே பிறந்திருக்கிற என் குழந்தைக்கும் வச்சுடலாம்னு பார்க்கிறேன்''.

டைரக்டர்: ''ஓ... 'மீண்டும் ராமலிங்கம்'னு வச்சுட்டாப் போச்சு!''

— ஏ. சுகுமார்.

மறுநாள் காலையில் அவனுடைய அறைக்குள் சென்றபோது மாயா அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தாள்.

ஒரு போட்டோ ஆல்பம் தலைமாட்டில் இருந்தது.

அரவிந்தன் சுற்றுமுற்றும் பார்த்தான். அங்கங்கே சிதறிய துண்டுகள் கண்ணில் பட்டன.

குனிந்து பொறுக்கி அள்ளி எடுத்தான்.

ஐந்தாறு போட்டோக்கள், தாறுமாறாகக் கிழிக்கப்பட்டிருந்தன. சிலவற்றை எடுத்துச் சேர்த்து வைக்க முயன்றான்.

அவனும் மாயாவும் சென்னை வந்த அன்று மாலையும், அதன்பின் ஒரிரண்டு நாட்களும் பல போட்டோக்கள் அவன் எடுத்திருந்தான். மாயாவும் வசுவுமாகச் சேர்ந்து பல போட்டோக்கள். அவனும் மாயாவும் ஒன்றாக இருக்க, வசு எடுத்த சில போட்டோக்கள்.

அரவிந்தன் போட்டோ ஆல்பத்தை எடுத்தான். பிரித்தான்.

கடைசி சில தாள்களில் பல போட்டோக்கள் பிய்த்து எடுக்கப்பட்டிருந்தது தெரிந்தது. எஞ்சியிருந்த புகைப்படங்கள் அவனும் மாயாவும் காட்சி அளிக்கும் படங்கள்.

எங்கே மாயா — வசு ஒன்றாக இருக்கும் படங்கள்?

அவனுக்குப் புரிந்தது.

மீண்டும் துண்டுகளை இணைத்துப் பார்த்தான்.

வசுவின் கண்கள் தெரியவில்லை. கண்கள் தெரிந்தபோது உடல் தெரியவில்லை.

மாயா வசுவைத் தன் முறையில் வெளியேற்றிவிட்டாள் என்பதைப் புரிந்துகொள்ள அரவிந்தனுக்கு அதிக நேரமாகவில்லை.

(தொடரும்)


உங்கள் இல்லத்தில் 90 பைசாவில்
வாரந்தோறும் சினிமா, நாடகங்கள்,
ஒளியும் ஒலியும், விளையாட்டு அரங்கம்
என இன்னும் எத்தனையோ நிகழ்ச்சிகள் !

உங்கள் இல்லம் அதில் நல்தொரு டிவியிருந்தால்-போதும்; உங்கள் குடும்பத்திற்காக, ஆம். பொழுது போக்கிற்கு அதைவிட சிறந்த, சிக்கனமான வழி ஏதுமில்லை ஒரு 60-வாட் பல்பிற்கு ஆகும் மின்சாரச் செலவும் டிவிக்கு ஆகும் மின்சாரச் செலவும் கிட்டத்தட்ட ஒன்றே. நீங்கள் தினமும் எல்லா நிகழ்ச்சிகளையும் பார்த்தாலும் அதற்காக டிவியின் மூலம் ஆகும் செலவு வாரத்திற்கு 90 பைசா தான் நிச்சயமாக விஞ்ஞானம் நமக்களித்துள்ள சிறந்த அன்பளிப்பு தொலைகாட்சி. ஆதலால் இன்றே உங்கள் குடும்பத்திற்கு ஒரு டிவியை வாங்குங்கள். அதுவே நீங்கள் உங்கள் குடும்பத்திற்கு அளிக்கும் சிறந்த பரிசாக இருக்கும்.

இப்போது, நீங்கள் எந்த டிவியையும் வாங்கும் முன், அது நம்பகமானதா என்று உறுதி செய்து கொள்ளுங்கள். அதில் தெள்ளத்தெளிவான படத் தோற்றத்திற்கு நீங்கள் தனி முக்கியத்துவம் கொடுக்க வேண்டும். செய்தி வாசிப்பவரின் கண் இமைகள் கூட அதில் துல்லியமாகத் தெரிய வேண்டும். அதாவது சாலிடெரில் தெரிவதுபோல்! அணுகிடுவீர் சாலிடெர் வைத்திருப்போரை, அறிந்திடுவீர் அதன் சிறப்பம்சங்களை. அப்போது தெரியும் உங்களுக்கு எதனால் சாலிடெரே அனைவராலும் விரும்பப்படும் டிவி என்று!






# சாலிடர்

## -தொல்லையில்லாத் தொலைக்காட்சி



# முரண்பாடுகள்

க்ராஸ்கட் ரோட் கனரா பாங்க் பஸ் ஸ்டாப்பில் தமிழ் மணியைப் பார்த்ததும் ஏழாம் நம்பர் பஸ்ஸில் ஜன்னலோரம் உட்கார்ந்திருந்த ரேகா, பஸ் நகர நகர எட்டிக் குதித்து இறங்கினாள்.

"ஹலோ தமிழ். என்ன இது? புஷ்பக விமானத்துல ஏதாவது வந்தீங்களா? உங்களை நேத்து மெட்ராஸ்லடி. நகர் வைத்திய ராமய்யர், தெருவுல பார்த்தேன்னு அண்ணா சொன்னானே" என்றாள். தமிழ் மணி ரேகாவைப் பார்த்ததும் அவள் காட்டிய ஆச்சரியத்திற்கு நிகரான ஆச்சரியத்தை முகத்திலும் வார்த்தையிலும் தேக்கினான்.

"உங்கண்ணாவை நேத்து மத்தியானம் பார்த்தேன். வீட்டுக்குத் திரும்பினா, ஒரு தந்தி காத்திருந்தது. போன மாசம் இன்டர்வியூக்குப் போன கம்பெனியிலிருந்து அப்பாய்ன்ட்மெண்ட் ஆர்டர் வந்திருக்கு. கொச்சியிலும் கோயம்பத்தூரிலும் பாக்டரி இருக்காம். இந்த ஊர் பாக்டரிக்கு அஸிஸ்டன்ட் லேபர் வெல்பேர் ஆபீசரா போஸ்ட் பண்ணியிருக்கான். காலைல, நீலகிரி எக்ஸ்ப்ரஸ்ல வந்தேன். பத்து மணிக்கு ஜாய்ன் பண்ணினேன். இப்ப சாய்பாபா காலனிக்குப் போய்ட்டிருக்கேன்."

"கன்க்ராட்ஸ் தமிழ்"

"தாங்க்யு".

"அங்க யாரு இருக்கா?"

"ரிலேடிவ் தான். பெரியப்பா முறை."

"எங்களை ஞாபகம் இல்லே...? அட்ரஸ் தெரியுமில்லே? ஜஸ்ட் போன் பண்ணியிருக்கலாமே?"

"ஸாரி ரேகா, சாய்பாபா காலனிக்கு இது போகுமில்லே?" நாலு சி வந்து நின்றது.

"மொதல்ல எங்க வீட்டுக்கு வந்துட்டுப் போங்க. அண்ணா ரொம்பச் சந்தோஷப் படுவான்".

"நீ சந்தோஷப்படமாட்டியா?"

"அதான் பஸ்லிருந்து குதிச்சு நிக்கறேனே?"

"நாளைக்கு வர்றேனே ரேகா, ஒரே டயர்டா இருக்கு. மொகத்தப் பாரு. ராத்திரித் தூக்கமே இல்லே. இப்பிடி வந்தா, உங்க வீட்லே யாருக்குமே என்னை அடையாளம் தெரியாது."

"வர்றதுக்கு இஷ்டமில்லே. மெட்ராஸ்ல எங்கண்ணா ஏதாவது சொன்னானா?"

தமிழ்மணியின் முகம் இதனால் மாறியது. சிரமப்பட்டு 'ஒன்றும் சொல்லவில்லை' என்பதற்குரிய முக பாவத்தை விநாடியில் நினைவுக்குக் கொண்டு வந்து, "ஒண்ணுமே சொல்லலியே?" என்றான். ஆனால் குரல் ஒத்துழைக்கவில்லை.

''என்ன சொன்னார்?'' என்று நேரடியாக ஒரு ஈட்டியைப் பாய்ச்சுவது போலக் கேட்டான் மீண்டும்.

''அதுதான் சொன்னேனே?''

''ஒண்ணுமே சொல்லலேன்னா?''

''ம்.''

நாலு சிபோய்விட்டதும்பஸ்ஸ்டாண்டில் இரண்டு பேர் மட்டும் நின்றார்கள். எதிர்த் தெருவில் இருந்து டி. வி. எஸ். ஐம்பதில் வந்த கண்ணாடி போட்ட நபர் ரேகாவைப் பார்த்துக் கை காட்டி விட்டுப் போனார்.

''எங்க வீட்ல குடி இருக்கார்'' என்றாள் ரேகா.

''சரி, இந்த பஸ் போகுமா ரேகா?'' என்று தமிழ் கேட்கக் கேட்க இருபது வந்து நின்றது.

''போகும்''.

''ம். நான் வரட்டுமா?''

''அப்ப நாளைக்கு வர்றீங்க?''

''கண்டிப்பா''.

''போன் நெம்பர், அட்ரஸ் தெரியுமில்லே?''

''கண்டிப்பா'' என்று அவன் உறுதிப் படுத்திக் கொண்டு பஸ்ஸில் ஏறிக் கொண்டான்.

ரேகா சிலநிமிடங்கள்பிரமைபிடித்தவள் போலநின்று விட்டுவெறுமையாய், அடுத்து வந்த ஏழில் ஏறிக் கொண்டாள்.

தமிழிடம் அண்ணா என்ன சொல்லியிருப்பான் என்பதைஅவளால்யூகித்துக்கொள்ள முடிந்தது. மனசு அதனால் இன்னும் தாழ்வாகிவிட்டது.

அன்னபூர்ணாவில் இறங்கிக் கொஞ்ச தூரம் நடந்து வீட்டுக்குள் நுழைந்த போது அண்ணா வெளியே புறப்பட்டுக் கொண்டிருந்தான்.

''அண்ணா தமிழ் மணி வந்திருக்கார்'' என்றவள் அவன் வேலையில் சேர்ந்த விபரத்தைச் சொன்னாள்.

''வரச் சொன்னியா அவனை?''

''பின்னே?''

''என்ன பின்னே? நான் தான் அவனை வரக் கூடாதுன்னு சொல்லி இருக்கேனே?''

ரேகா இந்த வார்த்தையை எதிர்பார்த்தவளாய் நிதானமாய், ''ஏன் சொன்னே?'' என்று கேட்டாள்.

''ஏன்னா? உனக்கு அடுத்த மாசம் கல்யாணம் நிச்சயம். இப்ப அவனைப் போய்ப் பாத்துட்டுப் பேசிட்டு, வீட்டுக்குவான்னு சொல்லிட்டு... உன் கல்யாணத்தை அது பாதிக்கும்''.

''என்னை பத்து நீ வச்சிருக்கிற ஃபார்முலாவைத் தப்புன்னு ப்ரூஃப் பண்ணப் போறேன்'' என்று அழுத்தமாய்ச் சொல்லி விட்டுத் தன் /உள் அறையில் நுழையும் போது அண்ணி அவளிடம் பேசுவதற்கு எதிர்பார்த்தவள் போல நோக்கி வந்தாள்.

''என்ன அண்ணி?''

''கோயிலுக்குப் போகணும். மறந்துட்டியா?''

''பத்து நிமிஷத்துல போலாம்.''

''மொகம் என்ன ஒரு மாதிரியா இருக்கு?''



"இனிமே அப்படித்தான் இருக்கும்" என்று சின்ன சிரிப்பை உதிர்த்தாள்.

"பேச்சும் ஒரு மாதிரியா இருக்கு?"

"இனிமே அதுவும் தான்".

"கோயிலுக்குப் போலாமில்லியா?"

"அதுக்கும் மொசுத்துக்கும் சம்பந்தமில்லே. பத்து நிமிஷத்ல வந்துடறேன்" என்றவள் பாத்ரூமிற்குள் நுழைந்து, தண்ணீரின் வெதுவெதுப்பை உணர்ந்து சட்டென்று குளித்து விட்டு, உடை மாற்றிப் புறப்படும்போது அரைமணி ஆகி விட்டது.

முன் அறையில் அண்ணா, யாருடனோ பேசிக் கொண்டிருப்பது தெரிந்தது. பார்வையைச் சற்று உள்ளே விசினாள். பஸ்ஸ்டாண்டில் தமிழ் மணியுடன் பேசிக் கொண்டிருக்கும் போது கை அசைத்து விட்டுப் போனவர். வெளியே அவர் டி. வி. எஸ். மொபட் நின்று கொண்டிருந்தது.

* * * * *

கோயிலில் கடப்பைக் கல் தளத்தில் பட்டுப்புடவைகளும்பாதங்களும் அலட்சியமாய் உலவிக் கொண்டிருந்தன.

"இந் நேரத்துக்கு கோயிலுக்கே வரக் கூடாது அண்ணி!" என்றாள் ரேகா.

"தெளிவாச் சொல்லு".

"யாரும் கோயிலுக்கு வர்ற மாதிரியே தெரியலே. கே. ஜி. காம்ப்ளெக்ஸ் தியேட்டருக்கு வந்தாப்ல இருக்கு".

"உன் மனசுலவேறெதுவோ புகுந்திருக்கு ரேகா".

"நான் தமிழ் மணியைக் கட்டிக்கவேணும்னு உங்க வீட்டுக்காரருக்கு — எங்க அண்ணாவுக்குப் பயம். அவர்கிட்ட, இவர் என்னென்ன சொன்னாரோ தெரியல. பாவம் அவர், என் கிட்ட பேசணும்னுக் கூடப் பயந்து சாகிறார். அண்ணா வேண்டாம் வேண்டாம்னு சொல்லச் சொல்ல தமிழ் மணியையே கட்டிக்கணும்னு பிடிவாதம் இருக்குது. இதைச் சொல்லத் தான் கோயிலுக்கு வந்தேன்."

"மொதல்ல சாமியக் கும்பிட்டுப் போகலாம். கூட்டம் அதிகமாயிடும்"

ரேகா அண்ணியை முறைத்தாள்.

"நீ மட்டும் லேசா. அண்ணாவுக்குப் பொண்டாட்டி இல்லியா?"

"ரேகா, தீபாராதனையைக் கவனி".

பத்து நிமிஷ மௌனத்தில் தரிசனம் முடித்து வெளியே வந்து கால்களை செருப்பில் நுழைத்து சாலையைக் கடந்து, நெரிசலை விலக்கி வந்தார்கள்.

"ரொம்ப மௌனமாயிட்டே?" என்று கேட்டாள் அண்ணி.

"மனசுக்குள் பேசிட்டு வர்றேன்."

"நிஜமா தமிழ் மணியைக் காதலிக்கிறியா?"

"ச்சீ... காதலாவது கீதலாவது. சின்ன வயசிலிருந்தே மெட்ராஸ்ல, பக்கத்து வீடுகள்ல இருந்தோம். அந்தப் பழக்கத்துல, கொஞ்சம் அதிகமாப் பேசிக்கவோம். இப்ப







நிரந்தரமா, இங்க குடி வந்தாச்சு. போன மாசம் உன் தங்கை கல்யாணத்துக்கு மெட்ராஸ் போயிருந்தப்ப, இவரைக் கல்யாணம் பண்ணிட்டா என்னன்னு தோணிச்சு. அது வார்த்தையிலும் வந்துடுச்சு. இது அண்ணாவுக்கும் தெரிஞ்சாச்சு. உடனே அபிஷியலா மாப்பிள்ளை பார்த்து ஏற்பாடு பண்ணிட்டிருக்காரு. இவரு என்ன பிடிவாதமா, என் கல்யாணத்துல இப்படி சர்வாதிகாரம் பண்ணணும்னு கேக்கறேன். அண்ணா பிடிவாதம் பண்ணினார்னா, அந்தத் தமிழ் மணியையே கல்யாணம் பண்ணிக்குவேன்."

"உன் அண்ணா தடுத்தார்னா?"

"தமிழ்மணியோட ஓடிப் போயிருவேன்!"

"ச்சீ" என்றாள் அண்ணி முகத்தைச் சுளித்துக் கொண்டு. "ரோட்ல இந்தப் பேச்சு வேண்டாம்"

வீட்டுக்குள் நுழையும் போது, ஒரு ஜோடி செருப்பு அன்னியமாகத் தெரிந்தது.

"யாரா இருக்கும்?"

அண்ணாவின் அறைக்குள் நுழைந்ததும், ஆச்சரியத்தை தருபவனாகத் தமிழ்மணி...

"நாளைக்கி வர்றேன்னீங்க?"

"பெரியப்பா வீட்லே போரடிச்சது வந்துட்டேன்".

"இந்தக் காரணம் நிஜந்தானா?" என்று கேட்டாள் ரேகா.

"நான் சொல்றேன்னா நம்ப வேண்டியது தானே...?"

"இவ அந்த டைப் இல்லியே?" என்றார் அண்ணா.

பற்களின் மீதான
தம்முடைய பிடிமானம்
தளர்ச்சி அடைய
உங்கள் ஈறுகளுக்கு
இடமளிக்காதீர் !

ஈறுகளை பலப்படுத்துவதற்கான விசேட
அஸ்ட்ரிஞ்ஜெண்ட் அடங்கியிருப்பது ஃபோர்ஹென்ஸ் ஒன்றில்தான்.
உங்கள் ஈறுகள் உறுதியோடிருக்கும் போது உங்கள்
பற்கள் நீடித்த ஆயுளைப் பெறுகின்றன.

சிறந்த அமெரிக்கப் பல் டாக்டர் ஆர். ஜே.
ஃபோர்ஹென், தன்னுடைய டூத் பேஸ்ட்டில் விசேட
அஸ்ட்ரிஞ்ஜெண்ட் ஒன்றைச் சேர்த்தார்! அது,
ஈறுகளில் நேரடியாக செயல்பட்டு உண்மையிலேயே
அவற்றை பலப்படுத்துகிறது. அது, ஈறுகளைப்
உறுதிப்படுத்துவதால் பற்கள் சிறந்த
பிடிமானத்தைப் பெறுகின்றன. ஆகவே பற்களுக்கு
உறுதியான அடித்தளமும் நீடித்த ஆயுளும்
கிடைக்கின்றன.






**ஃபோர்ஹென்ஸ் – பல் டாக்டரால் உருவாக்கப்பட்ட டூத்பேஸ்ட்**

339F 203 TAM

"என்க்குன்னு சொந்தமா ஒரிஜினலிடி வேண்டாம்னு நெனைக்கறீங்களா?"

"சில விஷயத்துல, மத்தவங்களோட ஒரிஜினலிடியை ஒத்துக்கணும்" என்றார் அண்ணா.

"இப்ப என் சொந்த விஷயத்துக்கு வருவோம். என் கல்யாணத்துல, யாருடைய சர்வாதிகாரத்தையும் அடக்கு முறையையும் விரும்பலே".

"இப்பத் தமிழ்மணி இருக்கார். அவரு முன்னால உன் புரட்சியை செய்ய வேண்டாம்" என்று தடுத்தார் அண்ணா.

"புரட்சியே அவர் சார்பானது தான். அவரு இல்லாம எப்படிச் செய்யறது?"

"நான் நாளைக்கு வர்றேனே?" என்று தமிழ்மணி எழ ஆரம்பித்தார்.

"மோதல்ல உக்காருங்க தமிழ்" என்று ரேகா அதட்டினாள். "உங்களைத் தான் கல்யாணம் பண்ணிக்குவேன்னு சொல்லிட்டிருக்கிறேன். இவங்க எல்லாம் அதைத் தடுக்கறாங்க".

"............".

"என்ன தமிழ், என்னை உங்களுக்குப் புடிக்குது இல்லையா?"

"புடிக்குது" என்றான் தமிழ், நிதானமாய்.

"விரும்பறீங்க?"

"நிச்சயமா!"

"கல்யாணம் பண்ணிக்கலாமா?"

"வேண்டாம்"!

"என்னது?" ரேகா அதிர்ந்தாள். "எனக்கென்ன கொறைச்சல்?"

"எங்க வீட்டை எதிர்த்துப் பண்ணிக்கறதுல எனக்கு இஷ்டமில்லே!"

"அவங்களை சமாதானம் பண்ணுவோம்!"

"உன்னைப் பண்ணிக்க அவங்களுக்கு இஷ்டமில்லே. வேற பொண்ணைத் தான் பண்ணிக்கணும்னு உறுதியாச் சொல்லியாச்சு. என்னால மீறமுடியலே. கஷ்டப்பட்டு என்னை படிக்க வைச்சாங்க. என்னோட நன்மைக்குத் தான் எதுவும் செய்வாங்கன்னு எனக்கு நம்பிக்கை இருக்கு. ஸோ, உன்னைப் பண்ணிக்க முடியாது" என்றான் தமிழ் பழைய நிதானத்தோடு.

ரேகா மனசு அடைக்க அவனையே பார்த்தவாறு சொன்னாள்.

"பொம்பளைக்குச் சுதந்திரம் வேணுமின்னு ஊர்ல இருக்கிற ஆம்பளைங்கல்லாம் கத்தறீங்க. சரின்னு, பொம்பளை சுதந்திரமா இருப்போம்னு ரெண்டு வார்த்தை பேசினா, உடனே, இவ குடும்பத்துக்கு லாயக்கில்லேன்னு குப்புற விழுந்துடறீங்க... அண்ணா, தமிழ் மணியே என்னை வேண்டாம்னு சொன்னதுக்கப்புறம் யாரைக் கல்யாணம் பண்ணிட்டா என்ன? நீ பார்த்த மாப்பிள்ளையையே ஏற்பாடு பண்ணிடு" என்றவள் எழுந்து தன் அறைக்குப் போய் விட்டாள்.

தமிழ் மணியும், அண்ணாவும், அண்ணியும் ஒருவருக்கொருவர் அன்னியமான பார்வையைப் பரிமாறிக் கொண்டனர்.

## நல்ல காரியம் நடந்தது



**போட்டி: 2**

உங்கள் ஊரிலோ வீதியிலோ உங்களுக்கோ மற்றவர்களுக்கோ பெரிய மனக்குறையாக இருந்த விஷயம் ஒருவர் தலையிட்டால் தீர்ந்து, நல்ல காரியம் ஒன்று நடந்திருக்கலாம். அதனால் நீங்களோ மற்றவர்களோ மகிழ்ந்திருக்கலாம். உதாரணமாக நெடுநாள் ஓடாத தேர் ஓடியது. அதைப் பற்றிக் கீழே வெற்றிடத்தில் எழுதி இந்த அரைப்பக்கத்தைக் கத்தரித்து அனுப்புங்கள். பிரசுரமானால் பரிசு. தவிர ஒருவருக்குக் குலுக்கல் முறையில் ஸூட்கேஸ். உறையின்மேல் "நல்ல காரியம் நடந்தது" என்று குறிப்பிடவும்.

**முடிவு தேதி: 27.5.85.**

**51 விலையுயர்ந்த ஸூட்கேஸ்களைப் பரிசாக அடைய வாய்ப்புண்டு. வாரம் தவறாது போட்டிகளில் பங்கு பெறவும்.**

**வி.ஐ.பி.ஸூட்கேஸ் பரிசுத்திட்டம்**

என் பெயர்: ..............................

விலாசம்: ..............................

..............................

## ராஜாஜி வாழ்க்கை வரலாறு

ராஜ்மோகன் காந்தி

# மன்னர் பாராட்டிய மது விலக்கு



* டி.டி.கே.: "ஸி.ஆர். நிறையவே யோசித்திருக்கிறார்."

இருபது ஆண்டுகளுக்கும் மேலாக ஸி.ஆரின் உயிருக்குயிராய் இருந்த கொள்கை மதுவிலக்கு. இன்று சட்டமாக்கப் படும் போது அது வெற்றிகரமாய் அமையுமா என்பது பற்றி நிறைய சந்தேகங்கள் இருந்தன. அதை அமல்படுத்துவதே முடியாத காரியம் என்று பலர் எண்ணினர். குடிப்பவர்கள் எப்படியும் தாமே கள்ளச் சாராயம் காய்ச்சியோ, அல்லது பிறரிடமிருந்து வாங்கியோ குடிக்கவே செய்வார்கள் என்று கருதப்பட்டது. இந்தச் சட்டத்தை அமல்படுத்த ஸி. ஆருக்கு எங்கிருந்து அதிகாரிகள் கிடைப்பார்கள் என்ற ஐயமும் எழுந்தது. ஆனால் ஸி. ஆர். உறுதியாக இருந்தார். மதுவிலக்கை அமல்படுத்த மிகச் சிறந்த ஐ. ஸி. எஸ். அதிகாரியான ஏ. எஃப். டபிள்யூ. டிக்ஸனைத் தேர்ந்தெடுத்தார். மது ஒழிப்புச் சட்டத்தை அமலுக்குக் கொண்டு வர வேண்டியவர் கலெக்டரே. எனவே ஒரு இந்தியரையே சேலம் கலெக்டராக ஸி. ஆர். நியமிப்பார் என்று எண்ணப்பட்டது. ஆனால் யாரும் சற்றும் எதிர்பாராதவிதமாய் டிக்ஸனைத் தேர்ந்தெடுத்தார் ஸி. ஆர். இந்த ராஜ தந்திரம் இருவிதங்களில் நற்பலன் தந்தது. முதலாவதாக, பிரிட்டிஷ் அதிகாரிகள் அரசுக்குத் தங்களிடம் நம்பிக்கை உள்ளதென்று உணர்ந்தனர் — அவர்களுள் ஒருவர் ஸி. ஆரின் மிகப் பிரியமான ஒரு திட்டத்தைச் செயல்படுத்துவதற்குத் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தார் அல்லவா? இரண்டாவது, மக்களிடம் காங்கிரஸின் மதிப்பு உயர்ந்தது. பிரிட்டிஷாருக்கு மிக அன்னியமான ஒரு கொள்கையை அமல்படுத்த ஒரு வெள்ளையனையே காங்கிரஸ் ஆட்சியினால் நியமிக்க முடிந்ததல்லவா! தான் மது அருந்தினாலும் மது விலக்கை வெற்றிகரமாய்ச் செயல்படுத்தக் கங்கணம் கட்டிக் கொண்ட ஓர் உயரமான, அனைவராலும் விரும்பப்பட்ட அதிகாரியாக விளங்கினார் டிக்ஸன்.

கலெக்டர் டிக்ஸனுக்கு உதவியாக தாம்ஸன் என்ற மற்றொரு ஆங்கிலேயர் மது விலக்கு அதிகாரியாக நியமிக்கப்பட்டிருந்தார். டிக்ஸனும் தாம்ஸனும் அந்த மாவட்டத்தின் பிற ஆங்கிலேய அதிகாரிகளும் ஸி. ஆர். அவர்களுக்கு உருவாக்கித் தந்த ஒரு கோட்பாட்டினை விசுவாசத்துடன் கடைபிடித்தனர். அதாவது, மதுவிலக்கு அமலில் உள்ள மாவட்டத்தின் அதிகாரிகள் யாரும் அந்த மாவட்ட எல்லைக்குள் மதுவைத் தீண்டக் கூடாது; பர்மிட் பெறவும் கூடாது. இத்தனைக்கும் பழக்க தோஷத்தைக் காரணம் காட்டி பிரிட்டிஷார் எளிதில் பெர்மிட் பெற முடியும். ஆனால் பழக்கத்துக்கு அடிமையாகிவிட்டதைக் காரணம் காட்டி இந்தியர்கள் பர்மிட் பெறுவது கடினமாயிருந்தது.

சேலம் அதிகாரிகளுக்குப் பங்களூர் போய் மது அருந்த சாத்தியம் இருந்தது. இதை ஸி. ஆர். ஆட்சேபிக்கவில்லை. கிளப்புகள், பெர்மிட் தாரர்களான உறுப்பினர்களுக்கு மட்டும் விற்க மது வாங்கி வைத்துக்கொள்ள லைசென்ஸுக்கு மனு செய்யலாம்; பிஷப்புகளும், பாதிரியார்களும் மதக் கோட்பாடுகளுக்கு இணங்க ஒயின் வாங்கி வைத்துக் கொள்ளலாம்; ஆஸ்பத்திரிகள் பிராண்டி வைத்துக் கொள்ள அனுமதிக்கப்பட்டன. இவ்வாறு ஒரு நியாய வரம்புக்குட்பட்டு சட்டம் அமுலாயிற்று. அளவுக்கு மீறிய உற்சாகத்தில் ஒரு மாஜிஸ்ட்ரேட் மதுவிலக்குச் சட்டத்தை மீறிய ஐரோப்பியர் ஒருவ

ருக்கு 500 ரூபாய் அபராதம் விதித்த போது ஸி. ஆர். அந்தத் தொகையை ஐந்தாகக் குறைத்தார்.

மது விலக்குப் பொறுப்பை ஏற்க டிக்ஸனிடமிருந்த உற்சாகமான உழைப்பு, தகுதி ஆகியவற்றுடன் காலச் சூழ்நிலையும் சேர்ந்து கொள்ளவே திட்டம் வெற்றி பெற்றது. முதல் மதுவிலக்கு ஆண்டில் கள்ளச் சாராயம் காய்ச்சிப் பிடிபட்டவர் 110 பேர்தான்; கள் இறக்கும் முயற்சியில் பிடிபட்டவர்கள் 170 பேர் மட்டுமே. இதே காரணங்களுக்காக இதற்கு முந்தைய ஆண்டில் அதாவது மதுவிலக்கு அமுலாகாத வருஷத்தில் பதிவான குற்றங்களின் எண்ணிக்கை முறையே 265; 470. இப்போது தொழிலாளர்கள் முன்னைக் காட்டிலும் ஒழுங்காக வேலைக்கு வருவதாகவும், அதனால் அவர்களது சம்பாத்தியம் உயர்ந்துள்ளதாகவும் முதலாளிகள் தெரிவித்தனர். மதுவிலக்கு அமலாகி நான்கு மாதங்களுக்குப் பிறகு டிக்ஸன் வெளியிட்ட ஓர் அறிக்கையில் 'ஆயிரக்கணக்கான இல்லங்களில் நிலைமை வியப்பூட்டும் அளவிற்கு மாறியுள்ளதாக' அறிவித்தார். 'குடும்பச் சண்டைகள் நின்றுவிட்டன, போதுமான அளவு உணவு குடும்பத்தில் அனைவருக்கும் கிடைக்கிறது. கடன்காரர்களின் பிடி தளர்ந்து விட்டது.' சென்னைப் பல்கலைக் கழகம், சட்டம் கொண்டு வரப்பட்ட முதலாண்டில் இரண்டு லட்சம் பேர் குடிப்பதற்குப் பணம் செலவழிப்பதை நிறுத்தியுள்ளனர் என்று ஆய்ந்தறிந்தது. அண்ணாமலைப் பல்கலைக் கழக அறிக்கை ஒன்று முன்னேற்றத்தைக் கண்கூடாகக் காண முடிவதாகக் குறிப்பிட்டது.

மாவட்டத்தின் கள் இறக்கும் தொழிலாளிகள் — சுமார் 14000 பேர் — புனர்வாழ்வு பெற்றனர். வெல்லம் உற்பத்தி செய்வதிலும், பால் வினியோகத்திலும், தரிசு நிலங்களைப் பண்படுத்துவதிலும் ஈடுபடலாயினர். ஒரு சிலர் ரப்பர் தோட்டங்களில் வேலை செய்ய மலேயா போய்ச் சேர்ந்தனர். ஸி. ஆர். பதவி ஏற்ற சில வாரங்களுக்குள் முதன் முதலாக மதுவிலக்குத் திட்டத்தை அறிவித்த போது, காங்கிரஸின் கடும் விமர்சகரான டி. டி. கிருஷ்ணமாச்சாரியே ஸி. ஆர். தம் திட்டத்தைச் செயல்படுத்துவது எப்படி என்று நிறைய யோசித்திருக்கிறார் என்பதைச் சுட்டிக் காட்டினார். ஸி. ஆரைப் பொறுத்தவரை இந்த முயற்சி விளையாட்டு, நாட்டுப் பாடல்கள், பஜனை, கிராமிய நடனம், தெருக்கூத்து, திரைப்படம், தேநீர், காப்பி போன்ற பல விஷயங்களைப் பிரபலப்படுத்தி கிராம வாழ்வை மலரச் செய்யும் ஒரு மாபெரும் திட்டத்தின் சிறு பகுதியே ஆகும். இந்த இலட்சியம் சுவையானதாக இருந்தாலும் அதை நிறைவேற்றத் தேவையான வசதிகள் அவரிடம் இல்லை. ஆந்திர மாவட்டங்களான சித்தூரிலும் கடப்பாவிலும் சேலத்துக்கு ஓராண்டுக்குப் பிறகு மது விலக்கு அமுலாயிற்று. இதற்கு ஒரு வருடம் கழித்து வட ஆற்காடும் மதுவை விலக்கியது. எல்லா மாவட்டங்களுமே சேலம் அடைந்த நற்பயன்களை அடைந்தன. இதே நேரத்தில் சட்டத்தை மீறி கள் இறக்குவதும் சாராயம் காய்ச்சுவதும் கொஞ்சம் கொஞ்சமாக அதிகரிப்பது போலும் தோன்றியது. வேலை வாய்ப்புக் கருதி பதநீர் இறக்குவது அனுமதிக்கப்பட்டது. இந்தச் சலுகையை துஷ்பிரயோகம் செய்வதைத் தடுக்க இயலவில்லை. இது எவ்வாறாயினும், உலக யுத்தம் மூண்டதன் பின்விளைவாக காங்கிரஸ் எடுத்த முடிவின்படி அக்டோபர் 1939—இல் ஸி. ஆரின் மந்திரிசபை ராஜினாமா செய்த போது எந்த ஆய்வும் மதுவிலக்குச் சோதனை தோல்வி அடைந்ததாகக் கூறியிருக்கவில்லை.

எர்ஸ்கைன் அரசருக்கு எழுதினார்: ''மதுவிலக்கு எதிர்பார்த்ததைவிட மிக அதிகமாக வெற்றி அடைந்துள்ளது. சேலம் மாவட்டத்தில் மது அருந்துவது பெருமளவில் குறைந்துள்ளது. பொது மக்கள் மது அருந்தும் உரிமை வலுக்கட்டாயமாய் பறிக்கப்பட்டதை எதிர்ப்பின்றி ஏற்றுள்ளனர்.''

'உங்கள் ராஜதானியின் பிரதம மந்திரி நற்குணங்கள் நிறைந்தவராய் இருப்பார் எனத் தோன்றுகிறது' என்றும் 'குறிப்பாக மதுவிலக்கைப் பற்றிய செய்தி அரசரை மிகவும் கவர்ந்தது' என்றும் அரசரின் காரியதரிசி கவர்னருக்குப் பதில் எழுதினார்.

தமிழாக்கம்:

**சிதாரவி.**

(தொடரும்)

''கத்தரிக்காய் கறி, கத்தரிக்காய் துவையல், கத்தரிக்காய் குழம்பு, கத்தரிக்காய் பச்சடி, என்று சாப்பிட்டு அலுத்து விட்டது. பக்கத்து வீட்டுக்காரரிடம் வேறு ஏதாவது செடி பயிர் பண்ணச் சொல்லு!''






"இவ்வளவு காலமா நான் காதலிச்சுக்கிட்டிருந்தா ங்க பெண்ணை வரதட்சிணை இல்லாமல் கல்யாணம் செய்துக்க நான் தயார். ஆனா எங்க காதல் முன்னிட்டு இது வரைக்கும் நான் செலவழிச்ச ரூ 5000த்தை மட்டும் கொடுத்துடுங்க போதும்!"

# மனிதன் எனும் தீவு

அண்டை அயலில் நடப்பதைப் பார்த்துக் கொண்டு சும்மா இருப்பவர்கள் நாம். நம் கண்ணுக்குத் தெரிந்து ஒரு இளைஞன் கெட்ட சகவாசத்தால் கெட்டுப் போகலாம். பக்கத்து வீட்டில் கொலையே விழலாம்; ஒரு பெண் கயவர்களிடம் சிக்கி துன்புறுத்தப்படலாம்—நமக்கெதற்குவம்பு என்று ஒதுங்கி விடுவோம். இந்த மெத்தனத்தைச் சாடுகிறார் கோமல் தமது புதிய நாடகத்தில். இதை வலியுறுத்த கட்டிடமே இடிந்து விழுந்தாலும் சீட்டாட்டத்தைக் கைவிடாத நான்கு நண்பர்களை அறிமுகப்படுத்துகிறார். மேலும்;

பெண்களுக்கு இழைக்கப்படும் அநீதிகளுக்கு எதிராகத் தாம் போர் தொடுப்பதாக இதில் சம்பவங்களைக் காண்பித்திருக்கும் கோமல், ஒரே ஒரு பெண் காரக்டர் ஜெயந்தியை வைத்துக்கொண்டு, நாடகத்தில் வரும் மூன்று வெவ்வேறு பெண்களை அறிமுகப்படுத்தியிருக்கிறார். புதிய உத்திகள்தாம்.

கதையம்சம் இல்லாவிட்டாலும் கூட, நாடக அமைப்பிலும் நறுக் — நறுக் வசனங்களிலும்ரசிகர்களைக்கட்டிப்போடும்திறமை கோமலுக்கு இருக்கிறது.

ஆரம்பத்தில்கதாபாத்திரங்கள்ஏதானும் பெண் இயக்கம் பற்றிக் கருத்தரங்கு நடத்துகிறார்களோ என சந்தேகப்பட வைக்குமளவுக்குச் சம்பாஷணை சொற்பொழிவு மாதிரி இருக்கிறது. அதுபோலவே கடைசியில் ஜெயந்தியை சக்தி ரூபமாக, கையில் திரிசூலத்துடன், பாரதி போற்றிய பராசக்தி இந்தப் பெண்தான் என்று முடித்திருப்பதும் சற்று ஆயாசமாகத்தான் இருக்கிறது. செயற்கையானதாகத் தோன்றுகிறது. தவிர்த்திருக்கலாம்.

ஆனால் கோமலின் நாடகத்துக்குத் தனித்தன்மை ஒன்று உண்டு என்பதை மறுப்பதற்கில்லை. அந்தத்தனித்தன்மையைத் தம்மோடு தக்க வைத்துக் கொள்வதில் அவர் செய்யும் முயற்சிகளுக்கு, சபா நாடக ரசிகர்கள் எத்தனை தூரம் ஒத்துழைப்புத் தருகிறார்கள் என்பதுதான் கவனிக்க வேண்டிய விஷயம்.

— சாருகேசி

மேலட்டையில

குமாரி ஜெயஸ்ரீ ராதாகிருஷ்ணன்

வண்ணப்படம்

உத்ரா



# ஒரு அஞ்சு ரூபா இருக்குமா?

"இதுதானே போஸ்டாபீஸுக்கு போற வழி... இந்தப்பக்கமாத்தானே திரும்பணும்.. ஐயா, பார்வையில்லாதவன்... யாராவது வழி காட்டுங்களேன்!"

அவருக்கு உதவலாமே என்ற மனப்பான்மையுடன் என் வேலையை அப்படியே போட்டு விட்டு வெளியே எழுந்து வந்தேன். எனக்கு முன் அந்தப் புண்ணியத்தை யாரோ ஒரு சிறுவன் தேடிக் கொண்டிருந்தான்.

அந்தக் கிழவரைப் பார்த்தேன்.

வயது எண்பதைத் தாண்டியிருக்கும். கண்கள் பார்க்கும் சக்தியை இழந்து விட்டனவே தவிர அவர் பிறவிக் குருடரில்லை என்பதை உணர்ந்தேன்.

அவர் போஸ்டாபீஸின் வாசல் படியில் வந்தமர்ந்தார். கூடவே ஒரு பெருமூச்சு.

இந்த துணை அஞ்சல் அலுவலகத்துக்கு நான் மாற்றலாகி வந்து சில தினங்களே ஆனதால் மற்றவர்களின் நடவடிக்கை என்னை வியப்பில் ஆழ்த்தியது. என்னை மட்டும் ஆகர்ஷித்த அந்தக் கிழவரின் குரல் மற்றவர்களைச் சிறிது கூடப் பாதிக்கவில்லை. அவரவரும் தத்தம் வேலையில் இயல்பாய் ஈடுபட்டிருந்தனர். அடுத்த அறையில் போஸ்ட்மேன்கள் குழுமி அன்று வந்த தபால் குவியலை மும்முரமாய் 'சார்ட்' பண்ணிக் கொண்டிருந்தனர். நான் என் ஸீட்டுக்குத் திரும்பினேன்.

"தங்கவேல் பிள்ளை!... தங்கவேல் பிள்ளை!... ஏன் சார், போஸ்ட்மேன் தங்கவேல் பிள்ளை வந்திட்டாரா?" — மீண்டும் அந்தக் கிழவரின் குரல் கணீர் என்றொலித்தது -அவருக்குயாரும் பதில்சொல்லவில்லை.

'என்புத் தோல் போர்த்திய அந்த உடம்பிலிருந்து இவ்வளவு தெளிவான குரல் எப்படிப்பிறக்கிறது!'— ஈஸ்வரனின் விந்தையை வியந்தேன்.

"ஏம்ப்பா, இந்தக் கிழவன் யாரு?" — அடுத்த ஸீட் குணசேகரனிடம் மெல்லியதாய் வினவினேன்.

"யாரு, வெளியில் கத்திக்கிட்டிருக்கிற கிழத்தைக் கேட்கிறியா... வறட்டு இழுப்புக் கேஸ்... 'ஓ.ஏ.பி.' (ஓல்டு—ஏஜ்—பென்ஷன்) மாசாமாசம் இந்த ஆளோட பெரிய ரோதனையா இருக்கும்... பென்ஷன் வந்திருச்சா, பென்ஷன் வந்திருச்சான்னு தொல்லை பண்ணும்... இல்லேன்னா நம்மகிட்டயே கடன் கேட்கும்... பிச்சைக்காக முப்பத்தஞ்சு ரூபாய்க்காக நம்மைப் பிறாண்டி எடுத்திடும்!" — என்று சலித்துக் கொண்டான்.

அந்த வயதான ஆத்மாவை அஃறிணையில் இவன் குறிப்பிட்டது என் மனதைப் பிசைந்தது.

"தங்கவேல்பிள்ளை!...தங்கவேல்பிள்ளே.. என் பென்ஷன் மணி ஆர்டர் வந்திருச்சான்னு கொஞ்சம் பாருங்களேன்... தேதி ஏழாய்டுச்சுங்களே... அந்த லிஸ்ட்டை நல்லாப் பாருங்க... நிச்சயம் என் நம்பருக்கும் வந்திருக்கும்!"—அந்தக்கிழவர் அங்கலாய்க்கிறார். நான் மீண்டும் ஸீட்டை விட்டு வெளியே வருகிறேன்.

"உடம்புல சக்தியில்லாட்டாலும் தொண்டை மட்டும் 'மைக்' மாதிரி இருக்கே.. பெரியவரே, சித்த நாழி சத்தம் போடாம இருங்க... இப்பத்தான் தபாலைப் பிரிச்சிட்டிருக்காங்க!" என்கிறார் வெளியே நின்றிருந்த ஒரு கஸ்டமர்.

"என்ன தம்பி, என் உடம்பைப் பார்த்து அப்படிச் சொல்லிட்டே... இப்ப வேணு நா எலும்பாய் இருக்கலாம்... அந்தக் காலத்துல நா பெரிய ஸ்போர்ட்ஸ்மேன் தெரியுமோ... ஓட்டப் பந்தயத்துல என்னை ஒரு பய மிஞ்ச முடியாது!" என்று அந்தப் பெரியவர் மறு

பட்டுக்கோட்டை ராஜா

தலித்ததும் 'கொல்' என்ற சிரிப்பு அலுவலகத்தைநிறைக்கிறது. அவரின் இயலாமையை நினைத்துப் பார்க்கிற எனக்கு மட்டும் சிரிப்பு வர மறுக்கிறது!

தங்கவேல்பிள்ளை வெளிப்படுகிறார் — "தோ பாருங்கோ, நீல கண்டம் பிள்ளைவாள்... இன்னிக்கும் 'ஓ. ஏ. பி.' மணி ஆர்டர் எதுவும் வரல்லே... நீங்க எதுக்கும் 'ட்ரஷரி'யில் போய்க் கேட்டுப் பாருங்கோ!" என்கிறார்.

உடனே அந்தப் பெரியவரின் சுருக்கம் விழுந்த முகத்தில் சோகம் படர்கிறது. நரைத்த புருவங்கள் நெளிந்திட விழிகளில் நீர் கோர்க்கிறது. உடைந்த குரலில் பேசுகிறார் — "தங்கவேல்பிள்ளை, ஒரு அஞ்சு ரூபா இருக்குமா? பென்ஷன் பணம் வந்ததும் குடுத்துடறேன்!"

"நீலகண்டம்பிள்ளை, போஸ்டாபீஸ் கொடுக்கிற சம்பளம் எந்த மூலைக்குக் காணுது... உங்களுக்குப் பென்ஷன் வந்தா நானே உங்கள்ட்ட கடன் கேட்கலாம்னு இருந்தேன்!" என்ற தங்கவேல்பிள்ளை கண் சிமிட்டி நக்கலாய்ச் சிரிக்கிறார்.

பார்வையில்லாதவரை இந்த உலகம் எப்படியெல்லாம் நடத்துகிறது! நான் நொந்து போகிறேன். பைக்குள்ளிருந்து ஐந்து ரூபாயை எடுத்து அந்தக் கிழவரிடம் கொடுக்கப் போன என்னைத் தடுத்து தங்கவேல் பிள்ளை தனியே அழைத்துப் போகிறார்...

"இதபாருங்க தம்பி, நீங்க இந்த ஆபீஸுக்குப் புதுசு... நடப்பைப் புரிஞ்சிக்காம ஒண்ணு கிடக்க ஒண்ணு பண்ணி வச்சி வம்புல மாட்டிக்காதீங்க... இப்போ இரக்கப்பட்டுப் பணம் கொடுத்தீங்கன்னு அது



தான்'சாக்குன்னு கிழவன் உங்களேயே பிடிச்சிக்குவான்... ஆகாயத்தோட போன சனியனே ஏணி வச்சி இறக்கின கதையா ஒவ்வொரு மாசமும் நீங்கதான் தொல்லேப் பட வேண்டி வரும்!'' என்று கிசுகிசுக்கிருர்.

நான் மௌனமாய் நகர்கிறேன். என் உணர்ச்சிகள் கட்டிப் போடப்படுகின்றன.

—''தங்கவேல்பிள்ளே, வேம்பு வந்திருக்காரா?... அவர்கிட்ட போய் நா கேட்டேன்னு அஞ்சு ரூபா வாங்குங்களேன்... சாப்பிட்டு மூணு நாளாச்சிய்யா... அன்னுடம் ஒண்ணு ரெண்டு சம்பாதிச்ச அவனும் உடம்புக்கு முடியாமப் படுத்திட்டாய்யா!'' — மீண்டும் அந்தப் பெரியவர்.

அவர் குறிப்பிட்ட வேம்பு என்பவரும் எங்கள் அலுவலகத்தில் எழுத்தர் தான். பெரியவரின் யாசகக் குரல் காதில் விழுந்தும் கொஞ்சமும் பாதிப்பின்றி வேலேயில் ஈடுபட்டிருக்கிருர். 'தான் இல்லேயென்று சொல்லும்படி' தங்கவேல்பிள்ளேயிடம் சைகையால் உணர்த்துகிருர்.

கிண்டல்காரத் தங்கவேல்பிள்ளே, ''நீலகண்டம் பிள்ளே, வேம்பு உள்ளே இருந்துகிட்டே இல்லேன்னு சொல்லச் சொல்ருரு.. நீங்க கிளம்புங்க!'' என்று விட்டு உள்ளே செல்கிருர்.

சற்றுநேரம் இடிந்துப்போய்அமர்ந்திருந்த அந்தப் பெரியவரின் கண்கள் மட்டும் நீரைச் சுரந்து கொண்டே இருந்தன. தட்டுத் தடவி எழுந்தவர் கண்களேத் துடைத்து விட்டுக் கொண்டு, ''இதுதானுங்களே வழி?' என்று கேட்டபடியே கைத்தடியால் பூமியைத் தட்டித் தட்டி முன்னேறி நடக்கிருர்.

நெஞ்சம் ரணமாகக் குணசேகரனிடம், ''ஏம்பா, இந்தப் பெரியவருக்குப் பிள்ளே குட்டி ஏதுமில்லேயா?... கடைசிக் காலத்துல இப்படிக் கஷ்டப்படுருரே?'' என்று ஆதங்கத்துடன் வினவுகிறேன்.

அவன் ஏதோ பெரிய 'ஜோக்'கைக்கேட்டு விட்டதைப் போல் எனக்கு எரிச்சல் வரும்படிச் சிரிக்கிருன் — ''என்னப்பா ராஜா இப்படிக் கேட்கிறே... இந்த வேம்பு யாருன்னு நெனச்சிட்டிருக்கே... அந்தக் கிழத்தோட பிள்ளேதான்!''

நான் அதிர்ந்து போனேன். அந்த தீனக் குரல் என் நெஞ்சை நெருடிற்று. ''ஒரு அஞ்சு ரூபா இருக்குமா?''

# மாபெரும் சலுகை

ஓர் அழகிய
கிச்சன் கண்டெய்னர்
ரூ.4-75 க்கு மட்டுமே
ஒரு கிலோ டிடர்ஜெண்ட் பவுடருடன்






ACIL/09b1/85-Tam

# சூப்பர் செக்

டிடர்ஜெண்ட்
பவுடர்

அற்புத சலவை
மகத்தான பொலிவு

# முத்த நன்றிகள்



என் பிரிய ஸகியே!
உன் கொலுசுகளுக்கு
என் நன்றி!
அவற்றின் ஒலி
என் பாடலுக்கு
சந்தங்கள் ஆகின்றன.

உன் வளையல்களுக்கு
என் நன்றி!
அவை, அடிக்கடி
கிலு கிலுத்து
உன் மணிச் சிரிப்பை
ஒலி பரப்புகின்றன.

உன் கண்களுக்கு
என் நன்றி!
அந்த கார்மேகங்கள்
பொழிந்ததால் தான்
என் கவிதைப்பயிர்
விளையத் தொடங்கிற்று.

ஜி. சிவகுமார்,
பி. எஸ்.ஸி. மூன்றாம் ஆண்டு,
அருள்மிகு பழனியாண்டவர் கல்லூரி,
பழனி.

# விடிகாலை



பனிச்சாரல் தாங்காமல்
பதர் போரிலிருந்து
எடை தூக்கும் பயில்வான் போல
மூக்கில் வைக்கோல் ஏந்தி
பூஞ்சிட்டு தடுமாறும்.

வரப்பு வழித்து விட்ட
வயற் காட்டுக் காற்று
ராக்கால ரகஸ்யத்தை
காதோரம் கிசுகிசுக்கும்.

வால் சுழித்து
குட்டை நீரைக் கலக்கி
மர வேரில் முதுகு தேய்த்துக்
கிடை மாட்டுக் கூட்டங்கள்
அசைந்தாடிக் கரையேறும்.

வாழ்ந்ததற்குச் சலித்து
வரும் நாளை நம்பி
மனதின் பாரங்கள்...
மாவுத் திரியாகி...
வாசற் கோலமாய்
விரலிடுக்கில் வழிந்தோடும்
விடிகாலை புலர்ந்துவிடும்.

—ராஜகுமாரன் (மதுக்கூர்),
இளநிலைப் பயிற்சி மாணவர்
(பி. எட்.), சுழல் எண்: 59,
அரசு கல்வியியல் கல்லூரி,
ஒரத்தநாடு, தஞ்சாவூர் (மா.வ.)

ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் இறந்தபின் சவ ஊர்வலத்தில் திரளான மக்கள் கலந்து கொண்டனர். வாண வேடிக்கையும் அலங்காரங்களும் கண்கொள்ளாக் காட்சியாக இருந்தன. எல்லோருக்கும் மகிழ்ச்சி. ஆனால் மன்னரின் மெய்க்காப்பாளன் சோகமாக வந்தான். 'உனக்கு மட்டும் என்னப்பா இன்னும் கவலை?' என்று கேட்ட போது அவன் வருத்தம் தோய்ந்த குரலில் சொன்னான்: ''எல்லாம் பிரமாதமாகத்தான் இருக்கிறது. ஆனால் இதையெல்லாம் பார்க்க மன்னருக்குக் கொடுத்து வைக்கவில்லையே.''

—தஞ்சை நிலா

D. நிலா, (வயது 14),
(மாணவி — IXth Standard),
D/o. P. துரைராஜ்,
துணை வட்டாட்சியர்,
2728, நாணயக்காரச் செட்டித் தெரு,
தஞ்சாவூர்—613 001.

## இரக்கம்

பெண்ணென்றால்
பேயும் இரங்குமாமே
இந்த
வரதட்சணை பேய் மட்டும்
எங்களை கண்டு
இரங்காததேன்?

## நிலவல்ல உன்முகம்

ப்ரியமானவளே
நிலவல்ல உன் முகம்
ஏனென்றால்
அது
தேயும் இயல்புடையதாமே?

## பனிமூட்டம்

ஓ...
சூரிய அடுப்பு
சமையலில்
இவ்வளவு
புகையா?

கிளை. அ. கதிர்வேல்,
பி.ஏ.தமிழிலக்கியம், இரண்டாமாண்டு,
(சென்னை பல்கலைக்கழக அஞ்சல் வழி கல்வி துறை),
கிளைப் பெருமழை—614703.
தஞ்சாவூர் (மா.வ.)

## வீணாய்ப் போன நாள்

* வீணாய்ப் போன நாள் எது? நாம் ஒரு தடவை கூடச் சிரிக்காமல் கழித்து விட்ட நாள்தான்! —செபாஸ்டியன் சாம்பர்ட்.

பலவீனர்களின் பாதையில் தடையாக நின்ற கருங்கல் பாறை, பலசாலியின் பாதையில் படிக்கட்டாக அமைகிறது.

—கார்லைல்.

தொகுப்பு: ராமலிங்கம், க.
(ஸ்ரீதர்),
ஏர்கண்டிஷனர் — ரெப்ரிஜிரேட்டர், இண்டியன் டெக்னிகல் இன்ஸ்டிடியூட் (தனியார்),
89, காந்தி அடிகள் சாலை,
கும்பகோணம்—612001.




## போட்டி



ஒலிம்பிக்கில்
உண்ணாவிரதப் போட்டி
நடத்தி இருந்தால்
மூன்று பதக்கங்களும்
ஏழை இந்தியர்களுக்கே
கிடைத்திருக்கும்,
என்று நினைத்தேன்
அதற்கும் போட்டி வந்துவிட்டது
எதியோப்பியாவில்.

அருண்,
II, எம்.ஏ. பொருளியல்,
ஈரோடு கலைக்கல்லூரி,
ஈரோடு—9.



குங்குமம் காரியாலயம் மேலாளர் திரு A. சண்முகவடிவேல் அவர்களின் குமாரத்தி செல்வி சாந்தி B.A.க்கும், சென்னை திருவல்லிக்கேணி திரு தி. எ. சிவநேசன் அவர்களின் இரண்டாவது குமாரன் செல்வன் பாலசுப்ரமணியன், B.Sc.க்கும் சமீபத்தில் சென்னையில் திருமணம் வெகுவிமரிசையாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்



திருத்துறைப்பூண்டி கல்கி ஏஜெண்ட் திரு R. பக்கிரிசாமி அவர்களின் புதல்வி செல்வி தேவசுந்தரிக்கும் திருப்பூண்டி திரு A. R. வீரபத்திர செட்டியார் அவர்களின் இளையகுமாரர் செல்வன் பிரபாகரன், M.A.க்கும் சமீபத்தில் சுவாமிமலை ஸ்ரீ சுவாமிநாத சுவாமி கோவில் திருமண மண்டபத்தில் திருமணம் வெகு சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்

## பாம்புகளின் பயணம்

இந்தோனேஷியா. ஜகார்தா நோக்கி ஓடிக்கொண்டிருந்தது எக்ஸ்பிரஸ்பஸ். சந்தேகத்தின் பேரில் பயணிகளில் ஒருவர் வைத்திருந்த மர்மமான மரப்பெட்டியைத் திறக்கும்படி போலீஸ் அதிகாரி உத்தரவிட்டார். அந்தப்பயணி அதனுள் நிறையப் பாம்புகள் இருப்பதால் அதைத் திறக்க முடியாது என்றார். அதிகாரி நம்பவில்லை. வேறு வழியின்றி பயணி பெட்டியைத் திறக்க 300 விஷப் பாம்புகள் வெளியே வரலாயின. ஒரே அமளி துமளி ஆகிவிட்டது. நல்ல வேளை, பெட்டியின் சொந்தக்காரரே பதற்றப்படாமல் வெளியே வந்த பாம்புகளைப் பிடித்துச் சுருட்டி மறுபடியும் பெட்டிக்குள் அடைத்து மூடினார்.

பாம்புகளின் பயணம் எங்கே தெரியுமோ? ஜகார்தாவில் உள்ள ஒரு உணவு விடுதிக்காம்!

"அஸ்வினி."

ஆதாரம்: 'ஹிந்து.'





"ஏணி கொண்டு வந்தால்தான் சோறு போடுவேன் என்கிறீயே, எதற்கு ஏணி?"

"குக்கர் வால்வு எகிறியதில் மொத்த சோறும் கூரையில் ஒட்டிட்டிருக்கு!"

## குஜுக் குஜுக்

### "சமத்து மாமா — அசட்டு மாப்ளே"

மாமா: சாந்தி முகூர்த்தம், தேன் நிலவு எல்லாம் எப்படி இருந்திச்சு?

மாப்பிள்ளை: சாந்தி முகூர்த்தம் சுமார் தான், தேன்நிலவு தான் டாப்—டக்கர். என்ன இருந்தாலும் பழைய படம் பழைய படம்தான்!

★

மாமா: வர ஆடிக்கு 'ஸ்கூட்டர்' வாங்கித் தரேன். இந்த பழைய ஸ்கூட்டரை வித்திடுங்க.

மாப்பிள்ளை: அந்த சிரமம் எல்லாம் வேண்டாம் மாமா! ஐநூறு கொடுங்க போதும். நல்லா ரிப்பேர் செய்து, புதுசு மாதிரி ஆக்கிடறேன்.

★

மாமா: நீங்க வந்தா தான் மாப்ளே வீடு வீடா இருக்கு.

மாப்பிள்ளை: போங்க மாமா, நீங்க ரொம்ப மோசம். ஆனாலும் மச்சானுக்கு ரொம்பத்தான் செல்லம் கொடுக்கிறீங்க. ஒவ்வொரு தடவையும் நான் வந்து தான் 'ஒட்டடை' தட்ட வேண்டியிருக்கு!

— முருகன்.



# வெள்ளித்திரை

# உதய கீதம்

தூக்குத் தண்டனைக் கைதி மோகனை ரேவதி பிடிவாதமாய்த் துரத்திப் பிடித்து ஒவ்வொரு முறை மலர்ச்செண்டு கொடுப்பதும், மோகன் எத்தனை எரிந்து விழுந்தாலும் தளராமல் மறுபடி வேறு முயற்சிகள் செய்து கொண்டேயிருப்பதும், சுவாரஸ்யமான ஆரம்பம் தான். இந்த முடிச்சை வைத்துக் கொண்டு 'ரிவர்ஸில்' யோசித்திருப்பார்களோ? கதையின் போக்கு அப்படித்தான் இருக்கிறது.

எத்தனை படத்தில் போலீஸ் அப்பா – கைதி பிள்ளை... கடமை – பாசம்... அதுக் தாக்கடா சாமி என்று கொஞ்சம் வித்தியாசமாய் போலீஸ் அம்மா – கைதி பிள்ளை. ஆனால் மெனு அதே. கடமை VS பாசம். லக்ஷ்மியிடம் உடுப்புக்கான மிடுக்கும் உறவுக்கான குழைவும் இருந்தாலும் ஏதோ மிஸ்ஸிங் (சரியான வாய்ப்பு?). அதனால் நிறைவாய் இல்லை.

இடைவேளையில் அட்டகாசமான திருப்பம் இருப்பது உண்மைதான். அப்புறம் தான் அந்தர் பல்டி! மோகனின் வயிற்றில் ஆழமாய்க் கத்தி செருகி ரேவதி செய்த காயம் ஓவர்நைட் சப்தமின்றி எப்படி ஆறியது? என்னவோ காலேஜ் லீவு விட்ட கணக்காய் அவர் ரேவதியுடன் மறு நாளே குதித்து ஆடிப் பாடுவது என்ன மாயம்? ஒரு கைதி தப்பிக்க முனைந்த போது, உயிருக்குத் துணிந்து பிடித்த அதே மோகன் பின்னும் போலீஸிடமிருந்து ரேவதி ஒளித்து வைத்த போது கொஞ்சம் விளையாட்டுத் தனமாய் இருப்பது என்ன நியாயம்? மோகனைத்தான் மறைத்து விட்டார்கள், சரி. ஊரில் சுதந்திரமாய்த் திரியும் ரேவதியைப் பிடிக்காமல் போலீஸ் நித்திரையில் ஆழ்ந்து விட்டதா? லாஜிக் பார்த்தால் படம் ஓடாதாமே! இது சினிமாக்காரர்களின் லாஜிக். விட்டுத் தள்ளுவோம்.

இளையராஜாவின் முன்னூறாவது படம் என்கிறது 'பானர்'. ஏமாற்றம் தரவில்லை. முக்கால்வாசி மிருதுவான சங்கீதம். எஸ்.பி.பி. யின் குரலில் தேனே, தென் பாண்டி மீனே சீங்காரம் செய்கிறது. ரேவதியின் துடுக்கு லக்ஷ்மியைச் சந்தித்து சோப் போட்டு அவர் காரில் வீட்டுக்குப் போகும் இடத்தில் மின்னுகிறது.

ஆனந்த் பாபு தோளைக் குலுக்கி ரயில்வே கை காட்டி மரம் மாதிரி கைகளை இறக்கி ஏற்றி 'டிஸ்கதை' பண்ணுகிறார்.

மரம் தோறும் உண்டியல் கட்டி கவுண்ட மணி பணக்காரர் ஆகும் கதை நல்ல கல கலப்பு.

எம். ஜி. வல்லபனின் வசனம் அங்கங்கே கரடு முரடு.

கதையில் நிறைய 'ஓட்டை'. ஆனாலும் நிற்காமல் உருட்ட டைரக்டருக்குத் தெரிந்திருக்கிறது.

உட்கார்ந்து பார்க்கலாம்.





# நான் சிகப்பு மனிதன்

மறுபடி டைரக்டர் எஸ். ஏ. சந்திரசேகர் சட்டத்தைக் கையில் எடுக்கும் ஒரு கதாநாயகனை வைத்துக் கதை பண்ணியிருக்கிறார். (இந்தக் கதைக்கு டைட்டிலே போதுமா என்ன?)

நட்ட நடு நகரத்தில் சாராயக் கடை, விபச்சாரத் தொழில், கதாநாயகனுக்குக் கோபம், எரிச்சல். லஞ்சம் வாங்கும் இன்ஸ்பெக்டரின் மெத்தனம் பொறுக்காத நாயகனே சாராயக்கடையிலும், விபச்சார விடுதியிலும் புகுந்து தான்! எதிரிகள், நாயகனை அடித்துத் தலை கீழாய்த் தொங்க வைத்து, கண்ணெதிரில் அவர் தங்கையை... மாமூல் தானே! அது போதாமல் அம்மாவை வேறு சாகடிக்க, அதனால் சினிமா தர்மப்படி நாயகன் ஒவ்வொரு ஆளாய்த் தீர்த்துக் கட்டுவது கதை.

மஞ்சள் நீராட்டு விழாவில் ரஜினி கையில் ஆரத்தித் தட்டை வைத்து திருஷ்டி கழிப்பதற்கு ஒரு டான்ஸ் ஆடுவதும், 'என்னண்ணா இது?' என்று தங்கை சிணுங்குவதும், ரஜினி, 'ஸ்டைலு, சும்மா இரு, பாவிக் கண்ணு' என்று ஆரம்பித்து திருஷ்டி சுற்றுவதும் 'ஜில்'. காட்சியில் ரஜினி துருவ நட்சத்திரம் தான்.

அப்புறம் ரஜினி படா விறைப்பாய் கறுப்பு சொக்காயும், பாண்ட்டும் போட்டு கேப் சுடுகிற மாதிரி இரவில் கூட்டுக் கொண்டு வருகிற விஷயம். ஒரு ரவியில் ரஜினி போகிறார். அங்கே அவர் எதிரிகள் ஒரு பெண்ணை பலாத்காரம் செய்கிறார்கள். சுடுகிறார். சாலையில் ஸ்கூட்டர் தம்பதிகளை வம்புக்கிழுக்கிற கூட்டத்திற்கு நடுவில் ரஜினி சுச்சிதமாய் ஆஜர். சுரங்கப் பாதையில் கொள்ளை முயற்சி. அங்கே ரஜினியின் துப்பாக்கிச் சீற்றம். இப்படி ஒரு 'இமேஜ்—பில்டிங்'.

பாக்யராஜின் ஸீரியஸ் முகத்திற்காக ஒன்றும் ஜனங்கள் சிரிக்காமல் விட்டு விடவில்லை. மனிதர் ஒரு சைக்கிளை; ஜோல்னாப் பையுடன் (சின்னசேலம் சிங்காரம்—சி. ஐ. டி.) உருட்டிக் கொண்டு வந்து நிற்பதென்ன! லேட்டையும், 'பெல்—கப்'பையும் பத்திரப் படுத்துவதென்ன! நைஸ்.

அப்புறம் கொஞ்ச நேரத்திற்கு அவர் இல்லை. மனசு தேடுகிறது எங்கே பாக்யராஜ் என்று. எங்க வைத்து விடுகிறார் மனுஷர்.

'வெண் மேகம்' பாட்டு அடக்கமாக சலசலக்கும் ஒரு நீரோடை. சத்யராஜிற்கு அவ்வளவாய் வேலை இல்லை. பாக்யராஜுடன் ஒரு சண்டை, ரஜினியுடன் ஒரு மோதல் என்று சுருக்கி விட்டார்.

நிழல்கள் ரவி, சுமதி, ஒரு வகையில் பார்க்கப் போனால் அம்பிகா கூட, ஆகியோர் நடித்திருக்கிறார்கள் பட்டியலில் இடம் பெறுகிறார்கள். 'என்னடா சி. ஐ. டி. முடி திருத்தும் நிலையம் என்று போர்டு எழுதுகிறாரே' எனப் பார்த்தால் கோர்ட்டில் கொட்டகை அதிரும்படி விளக்கம் கொடுக்கிறார் பாக்யராஜ்.

ரஜினி, பாக்யராஜுக்காகப் படம் ஓடும்.

ஜெயமன் மதன்

# உம்மிடம் குஷ்வந்த்சிங் வாடை அடிக்கிறதே?

* எஸ். ராஜகோபால், தஞ்சாவூர்.

? இலங்கைத் தமிழர் பிரச்சினைக்குத் தீர்வு காண அமைக்கப்பட்டுள்ள ஆலோசனைக் குழுவில் ஜி. பார்த்தசாரதியைத் தவிர ஒருவர் கூடத் தமிழர் இல்லையே?

! தமிழர்தான் தமிழர் பிரச்சினையைத் தீர்க்க வேண்டும் என்பதோ தீர்க்க முடியும் என்பதோ இல்லை. இருப்பினும் இந்தக் குழு அழுகிற தமிழக மக்களுக்கு மிட்டாய் வழங்குவது போலிருக்கிறதே தவிர உருப்படியாக என்ன சாதிக்கப் போகிறது? படையெடுத்துப் போக வேண்டும் என்றோ தனி ஈழ நாடு கோரிக்கையை அங்கீகரிக்க வேண்டும் என்றோ சொல்லாவிட்டாலும் பிரதமர் இது வரை எடுத்துள்ள முயற்சிகள் மேம்புல் மேய்கின்ற காரியங்களே. இதற்கு நமது முதல்வர் நன்றி தெரிவித்துவிட்டு வந்திருப்பதைப் பார்த்தால் அழுவதா சிரிப்பதா — புரியவில்லை.

* வானதி சோமசுந்தரம், சென்னை—18.

? ஸ்ரீகாஞ்சிப் பெரியவர் பற்றியும் அவரது அருள் வாக்குகளைத் தொகுத்த ஸ்ரீ ரா. கணபதி பற்றியும் தங்கள் தராசில் கொஞ்சம் விளக்குங்களேன்.

! காஞ்சி முனிவர் நடமாடும் தெய்வம். அவரைப் பற்றி தராசில் விளக்கவோ எடை போடவோ என்ன இருக்கிறது. அவர் இதற்கெல்லாம் அப்பாற்பட்டவர். பக்தி செலுத்துவோம்; அருளை வேண்டுவோம். அவர் சொற்படி நடக்க முழு முயற்சி செய்வோம். பல சமயங்களில் அவர் கருத்துப்படி நாம் நடப்பதுமில்லை. அதற்காக மன்னிப்பு வேண்டுவோம், கருணையைக் கோருவோம். அவர் எதிர்பார்ப்புக்கு ஏற்ப உயர மீண்டும் பெருமுயற்சி செய்வோம். சரி, ரா. கணபதிக்கு வருகிறேன். பரமாச்சாரியாருடைய வாக்குகளைத் தொகுத்துத் தருவதற்கு அனுமதி பெற்றுள்ள ஒரே நபர் என்றாலே போதும்; அவரது சிறப்பை விளக்க இதைவிட வேறு வார்த்தைகள் கிடையாது. பல மொழிகளில் ஆழ்ந்த கல்வி. ஞானி என்ற சொல்லுக்கு 99 சதம் தகுதியாகி விட்டவர். அதனாலேயே அடக்கமே உருவானவர். ஸ்ரீ சதாசிவம் சொல்வார் "கணபதி காற்றைக் குடித்தே உயிர் வாழ்ந்து விடுவான்" என்று. அப்படி ஒரு எளிமை — உணவு, உடை, வாழ்க்கை அனைத்திலும். கர்நாடக இசையில் ஆழ்ந்த புலமையும் ஈடுபாடும். குறை என்று சொல்வதெனில் சிலருக்கு அவரது எழுத்து நடை ஏற்க முடியாதிருப்பதைக் கூறலாம். நெருடலின்றி அவர் தோற்றத்தைப் போலவே அதுவும் எளிமையாக இருக்கக் கூடாதா? என்று எண்ணுவோர் உண்டு. காஞ்சி முனிவரின் அருள்வாக்குகளை எழுதும்போது அவர் பெரியவாளுடைய எளிய பிரவசன நடையைக் கையாள்கிறார். ஆனால் தனிப்பட்ட நடை வித்தியாசமானது. அது இலகுவானால் இன்னும் அதிகம் பேர் அவரது உயர்ந்த கருத்துக்களை ஆர்வத்தோடு படித்துப் பயன் பெறமுடியும்.

* பொ. பொன்ராஜ்குமார், கமுதி.

? காக்கி சட்டை ஏமாற்றி விட்டதற்குக் காரணம்...?

! யார் சொன்னது ஏமாற்றிவிட்டதென்று! ஒரு கிளுகிளு காதல்; நாலைந்து டிஷ்யூம் சண்டைகள்; ஒரு **Mad Max** லாரி சேஸ், இத்தனையும் சேர்த்து மசாலாவைக் கரைத்துக் கலந்திருக்கிறார்களே! நம் ஜாலி ரசிகர்களுக்கு இதைவிட என்ன வேண்டும்!

* சா. ரமேஷ்பாபு, லால்குடி.

? லால்குடியையும் குன்னக்குடியையும் ஒப்பிடுக.

! முன்னவர் கங்கை; இரண்டாமவர் நயாக்ரா.

* வேல் விஸ்வகுமார், சென்னை—33.

? அடிக்கடி உம்மிடம் குஷ்வந்த்சிங் வாடை அடிக்கிறதே?

! மனசில்பட்ட உண்மைகளை ஒளிவுமறைவின்றியும் அச்சமின்றியும் கூறுவதால் மினகாய்த் தூள் நெடி அடிக்கலாம்; சற்றே இண்டனும், கேலியும் கலப்பதால் காப்பிக் கொட்டை வறுபடும் மணம் இதமளிக்கலாம்; ஆனால் அவரது அந்த ஆபாச துர்நாற்றம் தராசுவிடம் இல்லையாதலால் நீர்


* வாரிசு.
* ஜாலி ரசிகர்கள்.



* வானம்...



* இவரைத் தவிர...



குராக

## நீங்கள் கேட்டவை

மூக்கை அழுந்தப் பொத்திக் கொள்ள அவசியமிராது.

* அ. சிவாராவணன், விருத்தாசலம்.
? நேற்றைய அரசியல் இன்றையச் சரித்திரம். இன்றைய அரசியல்...

! நாளைக்கு எச்சரிக்கை.

* வண்ணை கணேசன், சென்னை—11.
? தங்களுக்குப் பிடிக்காத நிறம் எது?

! அடிக்கடி மாறுகிற எந்த நிறமும்.

* ஏ. எம். அப்துல் அன்ஸார், பம்பாய்.
? நாமும் பலரின் சர்ச்சைக்குள்ளாக என்ன செய்ய வேண்டும்?

! சர்ச்சைக்குள்ளாகும்படி பேசுவதும் எழுதுவதும்வாழ்வதும்எளிது.சர்ச்சைக்கே இடமில்லாத வகையில் புகழ் பெறுவது தான் கடினம். (''பம்பாய்த் தமிழ் எழுத்தாளர் சங்க உறுப்பினர்'' என்று தாங்கள் குறிப்பிட்டுக் கொள்வதிலிருந்தே கேள்வியில் நக்கல் புரிகிறது.) சிலர் சர்ச்சைக்கு உள்ளாக வேண்டாம் என்பதாலேயே எதிலும் பொறுப்பேற்க முன் வராமல் ஒதுங்கி விடுவார்கள். இது கோழைத்தனம். பல பொதுக் காரியங்களை இழுத்துப் போட்டுக் கொள்ளவும் வேண்டும்; அவற்றை சர்ச்சைக்கும் கண்டனத்துக்கும் இடமில்லாத வகையில் நிறைவேற்றவும் வேண்டும். முயன்று பாருங்களேன்!

* கே. ஜி. எஃப். பழனிச்சாமி, பெங்களூர்.
? கே. ஆர். விஜயாவை அடுத்து ரேவதி, நளினி, ராதிகா — புன்னகை இளவரசி பட்டம் யாருக்கு?

! ரேவதி புன்னகையில் துக்கிளியூண்டு விஷமமும் ராதிகாவின் திறந்த வாய்ப் புன்னகையின் ஓர் ஓரத்தில் அசட்டுத்தனமும் இருப்பதைப் பார்த்தால் நளினியின் புன்னகைக்குத்தான் வாரிசாக வாய்ப்பு அதிகம். (பேசுவது புன்னகையைப் பற்றித்தான், முகவெட்டு குறித்து அல்ல.)

* ஏ. சுகுமார், காஞ்சிபுரம்.
? எழுத்துலகின் ஆல் ரவுண்டர் யார்?

! அன்று: ''கல்கி''; இன்று: தேடிக் கொண்டிருக்கிறேன்.

* பொன்னி, நாகப்பட்டினம்.
? ஓயாமல் சாராயம் குடிக்கும் அப்பா, ஒரு படம் விடாமல் பார்க்கும் அம்மா, வீட்டில் அடிக்கடி காசு திருடும் அண்ணன், எதிர் வீட்டுப் பையனைக் காதலிக்கும் அக்கா — இந்தச் சூழலில் நீங்கள் கடைசி பிள்ளையாக இருந்தால்...?

! அப்பா சாராயம் குடித்து அம்மா சினிமா பார்த்த பிறகு அண்ணன் திருட வீட்டிலே பணம் மிச்சம் இருந்ததா? ஆச்சர்யம்தான். நிற்க, இந்தச் சூழலில் நான் இருந்தால் ஒன்று கெட்டழிவேன். அல்லது ஞானியாவேன். நல்லதையே நினைப்போமே!

* எம். ஜமால், போடி.
? பம்பாய் மாநகராட்சி தேர்தலில் காங்கிரஸ் தோல்வி குறித்து?

! இந்தியன் என்ற உணர்வைக் கொன்று இன வேற்றுமை பார்க்கும் சிவசேனைக்காரர்களின் வெற்றி மகிழத்தக்கதல்ல.

* இரா. செல்வகுமார், ஓட்டேரி *
? ஊழல் செய்யாமல் லஞ்சம் வாங்காமல் நேர்மையாய் உழைக்கும் அரசியல்வாதி யார்?

! என்னமோ ஒரு பிரமாத நம்பிக்கையோடு கட்சிக்காகக் கொடி பிடித்து அடி படுகிறானே சாமானியத் தொண்டன் — அவன்தான்!

* ஜோ. பன்னீர்செல்வன், காரைக்குடி.
? எம். ஜி. ஆரிடம் எனக்குப் பிடித்தது அரசியலுக்கு அப்பாற்பட்டு கலை உலகில் இருந்தவர் என்று டி. ராஜேந்தர் கூறியிருக்கிறாரே?

! போராட்டங்களில் ஈடுபட அவரை அண்ணா அனுமதித்ததில்லை. மற்றபடி அரசியலுக்கு அப்பாற்பட்ட எம். ஜி. ஆர். என்பதே கிடையாதே!

* ரூ. 10 பரிசு பெறுபவர்:
இரா. செல்வகுமார்,
13, சந்தியப்ப முதலி தெரு,
ஓட்டேரி, சென்னை—12.



* எம். ஜி. ஆரிடம் பிடித்தது



* 99 சதம் ஞானி.



# கலாநிதியின் கண்டுபிடிப்பு

ரோட்டரி கிளப் கண்காட்சியில் எல்காட் பெவிலியனில் இருந்தார் கலாநிதி. பிரஸிடென்ஸி கல்லூரியில் எம். ஏ. பாலிடிக்ஸ் முடித்துவிட்டு, இப்போது சட்டக் கல்லூரி மாணவர். சொந்த ஊர் மதுரைப் பக்கம்.

தான் கண்டுபிடித்த கருவி பற்றி, பார்வையாளர்களிடம் விவரித்துக் கொண்டிருந்தார். அவர்களும் ஆர்வமுடன் கேட்டுக் கொண்டிருந்தார்கள். கலாநிதி தன் கண்டுபிடிப்பு பற்றிச் சொன்னார்:

"இந்தக் கருவியின் பெயர் — 'கால் ஆட்டோமாட்'. இது ஒரு அலாரம் கடிகாரத்துடன் இணைக்கப்பட்டுள்ளது. குறிப்பிட்ட நேரத்துக்கு அலாரம் செட் பண்ணிவிட்டால், அது தானே இயங்கி, லைட், ரேடியோ, டி.வி. டேப் ரெக்காரடர், மிக்ஸி, கிரைண்டர், மோட்டார்பம்ப் எதைவேண்டுமானாலும் ஓடச் செய்யும்; நிறுத்திவிடும்."

இன்னும் விவரித்தார்:

"காலை 5 மணிக்கு எழுந்திருக்க வேண்டுமானால் இந்தக் கருவியுடன் உள்ள கடிகாரத்தில் 5 மணிக்கு அலாரம் செட் பண்ணி, விட்டு, டேப் ரெக்கார்டரை இணைத்து, பிடித்த காஸெட்டைப் போட்டு விட வேண்டியதுதான். காலை 5 மணிக்கு தானாக டேப் இயங்கி, உங்களை எழுப்பிவிடும். ஸ்விட்சைத் தேடித் தடவ வேண்டிய அவசியமும் இல்லை; லைட்டும் தானாக எரியும்.

"இது போலத்தான். கிரைண்டருடன் இணைத்துவிட்டு, கருவியை செட் பண்ணி விட்டு, வேறு வேலை செய்யப் போய் விட்டாலும், கரெக்டாய் கிரைண்டர் தானாக ஆஃப் ஆகிவிடும்.

"மாலை எல்லோரும் 4 மணிக்கு வெளியில் போகிறீர்கள். திரும்பி வர ராத்திரி பத்தாகும். ஆனால் வீட்டில் ராத்திரி 10 மணி வரை லைட் எரியாமல் இருப்பது நல்லதில்லை.

"என்ன செய்யலாம்? உங்களுக்கு உதவும் கால் ஆட்டோமாட். மாலை ஆறு மணிக்கு செட் பண்ணிவிட்டால் தானாக விளக்குகள் எரிய ஆரம்பித்துவிடும்."

இன்னும் எத்தனையோ பலன்கள்!

சென்னை தெற்கு ரோட்டரி கிளப்பிற்கு வயது 25. வெள்ளி விழாவுக்காக 'ரெல்ஃப் '85' என்கிற எலெக்ட்ரிகல் மற்றும் எலெக்டிரானிக் கண்காட்சியை நடத்தினர். திறந்து வைத்தவர் கவர்னர் குரானா. பல்வேறு நிறுவனங்களும் பங்கேற்ற இந்த கண்காட்சி மூலம் நிதி திரட்டி, தான் 'தத்து' எடுத்துக் கொண்டுள்ள 'திருவிடந்தை' கிராமத்து முன்னேற்றத்துக்குப் பயன்படுத்தப் போகிறார்களாம்.

அந்த கிராமத்தில் இளைஞர் முகாம்கள் நடத்துவதோடு, அக்கிராமத்து இளைஞர்கள் தொழிற்கல்வி பெறவும் உதவப் போகிறார்களாம். திருவிடந்தையில் அமைந்துள்ள 1000 வருட புராதன பெருமாள் கோவில் பராமரிப்பைக் கவனிக்கப் போகிறார்களாம். இதற்கெல்லாம் மேலே, ஒரு கம்ப்யூட்டர் சென்டர் அமைத்து, கம்ப்யூட்டர் கல்வி தரப்போகிறார்களாம்.

இவர்கள் நடத்திய ரெல்ஃப் கண்காட்சியில்தான் கால் ஆட்டோமாட்டைப் பார்த்தேன். இதை வடிவமைத்த கலாநிதிக்கு கங்கிராட்ஸ் சொன்ன போது, தட்டுத் தடுமாறி கைகளைப் பிடித்துக் கொண்டார்.

கலாநிதிக்குக் கண் பார்வை இல்லை.

"பார்வையில்லாமல் இருந்தும் இது எப்படி சாத்தியமாயிற்று?"

"பாளையங்கோட்டை, பார்வையற்றோர் பள்ளியில் படித்தவன் நான். அந்தச் சின்ன வயசு முதலே கண் பார்வையில்லாதவர்கள், மற்றவர்களை விட எந்த விதத்திலும் குறைந்தோரல்ல. அவர்களாலும் சாதனைகள் புரிய முடியும். இதை நிரூபிக்க வேண்டுமென எனக்கு ரொம்ப ஆர்வம். அதன் விளைவு தான் இது."

சந்திப்பு: ஜூலி.
புகைப்படம்: ஜெய்மோகன்

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600032 (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani
Editor: K. Rajendran

மின்னும் மேனி
மெருகுக்கு ரெக்ஸோனா




மின்னி மிளிரும் மேனி... என்னாளும் உங்கள் பொன்னான கனவு...நிறைவேற வரமளிப்பது ரெக்ஸோனா.

சரளம், கருவா, கிராம்பு, ஹபுஷா (தேவதாரம்) ஆகிய நாலு வகை இயற்கைத் தைலங்களின் கற்கலவை யான ரெக்ஸோனா...சருமப் பராமரிப்பிற்கு இயல்பான வழியாகும்.

**ரெக்ஸோனா** உங்கள் மேனியை மென்மையோடு மெருகு மிளிர வைத்திருக்கிறது.

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

LINTAS RX 84 2012 TM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

# நட்சத்திரப் பதவிக்கு ஐந்தே மீட்டர்











ஸ்ரீதேவி. பாம்பே டையிங்—சினி ப்ளிட்ஸ் ஸ்டார் போட்டியில் முதலிடம் பெற்ற நட்சத்திர நடிகை.

எழில் நட்சத்திரம் ஸ்ரீதேவி. அவரைப் போலவே உயர்ந்தெழுமீர் ஒளி நட்சத்திரமாக—பாம்பே டையிங் சேலைகளிலே. உடுப்புத் துணிகளிலே. கண்கவர் வண்ணங்கள், கருத்திற்கிசைந்த டிசைன்கள். உங்களவர் கண்ணுக்கு நட்சத்திரமாக ஜொலியுங்கள். அதற்கு ஐந்தே மீட்டர் போதும்!

**பாம்பே டையிங்**



சேலைகள் • உடுப்புத் துணிகள்.

BDM 1571